# கல்கி



1977 மார்ச் 13
நள ௵ – மாசி 30

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


ராஜாஜி சிந்தனை

## அடக்கம் அமரருள் உய்க்கும்

**நா**ன் சென்னைக் கோட்டையில் உள்ள தலைமைச் செயலகத்தில் பணி புரியும் ஒரு தபேதார். என்னுடைய முப்பது வருஷத்துக்கு மேலான அனுபவத்தில் 1952-54ல் முதலமைச்சராக இருந்த ராஜாஜியை மறக்கவே முடியாது. அப்பொழுது அமைச்சராக இருந்த திரு பக்தவத்சலம் அவர்களிடம் நான் தபேதாராக இருந்தேன். முதலமைச்சர் அறையிலிருந்து மூன்று அறைகள் தள்ளி திரு பக்தவத்சலம் அறை இருந்தது. ராஜாஜி காலை ஒன்பது ஒன்பதரை மணிக்குள் அலுவலகத்துக்கு வந்து விடுவார். பன்னிரண்டு பன்னிரண்டரை மணி வாக்கில் நடுப்பகல் உணவுக்கு வீட்டுக்குச் செல்வார். ஒரு நாள் அப்படிப் போகும்போது அறை வாயிலில் நின்று கொண்டிருந்த என்னிடம் 'பக்தவத்சலம் அறையில் இருக்கிறாரா?' என்று கேட்டார். 'ஆம்' என்று பதிலளித்தேன். உடன் வாயில் கதவைத் திறந்து சிறிது நேரம் பேசிவிட்டுச் சென்றுவிட்டார். மற்ற அமைச்சர்களின் தபேதார்களை விசாரித்ததில் இம்மாதிரி மற்ற அமைச்சர்களையும் அவர் சென்று பார்த்ததாக அறிந்தேன். 'முதலமைச்சர் கூப்பிடுகிறார்' என்று சொன்னால் அமைச்சர்கள் முதலமைச்சர் அறைக்கு ஓடும் காட்சியை விட்டுத் தாமே சக அமைச்சர்களின் அறைகளுக்குச் சென்று பேச்சு நடத்திய முதலமைச்சர் ராஜாஜி ஒருவர்தாம். அதுவும் கவர்னர் ஜெனரலாக இருந்துவிட்டுத் தமிழகத்தின் முதலமைச்சர் பதவி ஏற்ற நிலையில் அவர் இப்படி நடந்துகொண்டார் என்பதை நினைக்கும்போது மெய்சிலிர்க்கிறது.

—டி. நாகப்பன், அரக்கோணம். ராஜாஜி சிலை திறப்பு விழா நினைவு மலரில்

# ஸ்திரத்தன்மை எனும் வெற்றுக் கோஷம்

க. சந்தானம்

ஸ்திரத் தன்மை எனும் கோஷத்தைப் பிரதமர் திரும்பத் திரும்பப் போகுமிடமெல்லாம் எழுப்பி வருகிறார். நாடெங்குமுள்ள காங்கிரஸ்காரர்களும் அதையே எதிரொலிக்கிறார்கள். நாட்டுக்கு ஸ்திரத் தன்மையைக் காங்கிரஸ் ஆட்சிதான் தந்துள்ளது என்பதும் அக் கட்சி மீண்டும் பெரும்பான்மை பலத்துடன் தேர்ந்தெடுக்கப்பட்டாலொழிய அந்த ஸ்திரத்தன்மை போய் விடும் என்பதும் இவர்கள் வாதம். இந்த வாதத்தையும் கோஷத்தையும் ஜாக்கிரதையாகப் பரிசீலிக்க வேண்டியது அவசியம்.

ஸ்திரத் தன்மை என்பதில் மூன்று அம்சங்கள் உண்டு. தார்மீக, அரசியல், பொருளாதார ஸ்திரத் தன்மைகள். சுதந்திரம், நீதி, பொதுவான நல்லெண்ணம் ஆகியன சூழலில் நிலவினால்தான் தார்மிக ஸ்திரத் தன்மை ஏற்படும். கடந்த இருபது மாதங்களில் தேசத்தில் இந்தச் சூழ்நிலை அறவே இல்லை என்பதை மறுக்க முடியுமா? சந்தேகங்கள், பயம், கசப்புணர்ச்சி, விரோத பாவம் ஆகியன மக்களிடம் இந்த இருபது மாதங்களில் நிலவியது போல் 1947-க்குப் பிறகு வேறு எப்போதுமே இருந்ததில்லை. இத்தக் கொடிய விளைவுகளை நீக்க நேர்மையும் புத்திசாலித்தனமும் மிக்க ஓர் அரசு இன்னும் பல ஆண்டுகளுக்குப் பாடுபட வேண்டியிருக்கும். தற்சமயம் இந்தியா இத்தகைய ஒரு தார்மீகச் சீர்குலைவில் ஆழ்ந்து போயிருப்பது ரொம்ப ரொம்ப வருத்தப்பட வேண்டிய விஷயம்.

அரசியல் ஸ்திரத்தன்மை என்ற வாதமும் நியாயமானதல்ல. மத்தியில் ஏறத்தாழ ஒரு சர்வாதிகார ஆட்சி இருந்தது என்கிற ஓர் உண்மையைத் தவிர அரசியல் ஸ்திரத்தன்மை எந்த மாநிலத்திலும் அல்லது உள்ளாட்சியிலும் நிலவவில்லை. குஜராத்திலும் ஒரிஸ்ஸாவிலும் அமைச்சரவைகள் மாற்றப்பட்டன. தமிழ்நாடு ராஷ்டிரபதி ஆட்சிக்கு உள்ளாகியது. மேற்கு வங்க அரசு அவ்வப்போது ஒட்டுப் போட்டு வைக்கப்படுகிறது. மற்ற ராஜ்யங்களில் குறைபாடுகளை வெளியிட முடியாமல் பத்திரிகைத் தணிக்கை அமுக்கி விட்டது. விஷய ஞானமுள்ளவர்கள் இப்போதுள்ளது போல் லஞ்ச ஊழல் முன்னெப்போதும் இருந்ததில்லை என்று என்னிடம் கூறுகிறார்கள்.

ஸ்திரத் தன்மை என்பது பொருளாதார ரீதியில் மட்டுமே சிறிதளவு ஏற்பட்டிருப்பதாகக் கருதலாம். பருவ மழை பொய்க்காததாலும் சில சர்வதேச நிகழ்ச்சிகளின் விளைவாலும் இந்தியப் பொருளாதாரம் கடந்த இரு ஆண்டுகளில் அதற்கு முந்தைய ஐந்தாண்டுகளை விட உயர்ந்த நிலையினை அடைந்துள்ளது. ஆனால் வறுமைப் பிரச்னை சக்தி வாய்ந்த விதமாகச் சமாளிக்கப்படவில்லை. திரு ஜகஜீவன்ராம் இந்த உண்மையைச் சந்தேகத்துக்கிடமின்றி அம்பலப்படுத்தி விட்டார். வேலையில்லாத் திண்டாட்டமும் அதன் விளைவான கஷ்டங்களும் அதிகரித்து வருகின்றன. ஆகமொத்தம் பொருளாதார அம்சத்திலும் கூட்டல் குறியும் கழித்தல் குறியும் ஒன்றையொன்று சமன் செய்து விடுகின்றன.

காங்கிரஸைச் சில காலம் எதிர்க்கட்சியாக்குவதன் மூலமே இந்திய ஜனநாயகம் சகஜ நிலைக்குத் திரும்ப முடியும். நெருக்கடி நிலைப் பிரகடனத்தை வாபஸ் பெறத் தயங்குவது ஒரு பெரிய அபாயம் இருப்பதை உணர்த்துகிறது. நெருக்கடி நிலைப் பிரகடனத்தைத் தளர்த்தியிருப்பதாகப் போக்குக் காட்டியுள்ளார்களே, அதையும் விட்டு விட்டு விசாரணையின்றிக் காவலில் வைப்பதையும் பத்திரிகைத் தணிக்கையையும் மீண்டும் தீவிரப்படுத்தலாம் என்கிற அபாயம்தான் அது. பிரதமர் மட்டுமின்றி மற்ற காங்கிரஸ்காரர்களும் இந்த முக்கிய விஷயத்தில் வாய் திறவாமல் மௌனம் சாதிப்பதைக் கவனிக்க வேண்டும். தங்கள் சர்வாதிகாரப் போக்கை ஈடுகட்ட ஜனநாயக வாதிகள் போல் நடிப்பதே போதும் என்று நினைக்கிறார்கள்.

பிரதமருடைய, காங்கிரஸ் கட்சியினுடைய ஜனநாயக பக்திக்குத் தேர்தல்

கல்கி மலர் 36 இதழ் 33



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

நடத்துவதாக அறிவித்ததே போதிய அத்தாட்சி என்று கூறுகிறார்கள். ஹிட்லர், முசோலினி போன்ற சர்வாதிகாரிகளுக்குக் கூடத் தேர்தல்கள் ரொம்பப் பிடிக்கும். ஜனங்களை ஏமாந்த சோணகிரிகள் என்றும் அவர்களைக் கோஷங்களால் மயக்கி விடலாம் என்றும் அவர்கள் நம்பினார்கள்.

மக்கள் சபைத் தேர்தலை ஒத்திப் போடுவதாகக் கொண்டு வரப்பட்ட தீர்மானம், தேர்தலுக்குரிய வாய்ப்பான சந்தர்ப்பத்தைத் தாம் தேர்ந்தெடுக்கும் வசதிக்காகவே என்று பிரதமர் விளக்கியுள்ளார். எதிர்க் கட்சியினர் சற்றும் எதிர்பாராத சமயத்தில், அவர்கள் தொண்டர்கள் எல்லாம் விசாரணையின்றிச் சிறை வைக்கப்பட்டிருக்கும் நேரத்தில், எதிர் அணியிடம் பரோபோ பணம் சேர்ப்பதற்குரிய வாய்ப்போ இல்லாத தருணத்தில் — இப்போது-கலபமாகத் தேர்தலை நடத்தி வென்று விடலாம் என்று பிரதமர் எண்ணினார் போலும். அவருடைய கணிப்பு தவறு என்று மக்கள் அவருக்குப் புரிய வைப்பார்கள் என நம்புகிறேன்.

# முடிவு தெரியாத இறுதி ஆட்டம்



எழும்பூர் நகரசபை ஸ்டேடியம். ஹாக்கி தேசியப் போட்டியின் இறுதி நாள் ஆட்டம்.

''என்னப்பா இது! ஏர்லைன்ஸ் அணியினரும் ரயில்வே அணியும் பந்தை அடிக்கிறதற்குப் பதிலாக ஹாக்கி மட்டையால் ஒருவரையொருவர் அடிக்கக் கிளம்பி விட்டார்களே! ராகுகாலத்தில் ஆட்டம் தொடங்கிய தன் பலன் இது!'' என்றார் முதியவர்.

''நடுவர்கள் உட்புகுந்து சண்டையை நீக்கிச் சமாதானப்படுத்தி விட்டார்கள்! இதற்கு வீண் ராகுகாலத்தை இழுக்காதீங்கோ!'' என்று பொரிந்து விழுந்தான் ஓர் இளைஞன்.

''பார்த்தேளா! ராகுகாலமானதாலே நீங்களும் என்னோடு சண்டைக்கு வந்துட்டேள்! என்ன செய்யறது!''

''வாயை மூடிண்டு ஆட்டத்தைப் பாருங்கோ! என்னமா வேகத்தோடு ரயில்வேயும் ஏர்லைன்ஸும் ஆடறா பாருங்கோ! ஒவ்வொரு 'பாஸும்' ஏ ஒன்!''

''நான் ஒசி பாஸிலே வந்ததைச் சுட்டிக் காட்டாதேப்பா! நான் புறப்பட்டு வந்த வேளை சரியில்லே! ஆட்டமும் 'டிரா'. பத்து நிமிஷ அதிகப்படி ஆட்டமும் டிரா!''

''கவலைப்படாதேங்கோ! டைபிரேக்கர்லே முடிவு தெரிஞ்சுடும்!'' என்று சமாதானப் படுத்தினான் இளைஞன்.

''அதுதான் இல்லே. என்ன 'முடிவு' எடுத்திருக்கா, பார்த்தியோ? டைபிரேக்கர் இல்லே! ஏர் லைன்ஸ் குழுவும் ரயில்வே குழுவும் வெற்றிக் கோப்பையைப் பகிர்ந்து கொள்ளப் போறாளாம்!'' என்று துடித்தார் முதியவர்.

''அதிலென்ன தப்பு? பதினெரு தடவை ரயில்வே தேசிய வெற்றியைத் தனித்துப் பெற்றிருக்கு! அதுவே மூணு தடவை; சர்வீஸஸ், தமிழ் நாடு, பஞ்சாப் கோஷ்டிகளோடு வெற்றியைப் பகிர்ந்து கொண்டிருக்கு. இப்போ முதல் தடவையா ஏர் லைன்ஸ் கோஷ்டியோடு வெற்றியைப் பகிர்ந்துகொள்கிறது!'' என்று வியாக்கியானம் செய்தான் இளைஞன்.

''தப்போ சரியோ, ரசிகர்களுக்குப் பிடிக்கலே. வெற்றிக் கோப்பையோடு ரயில்வே குழுவினரும், ஏர்லைன்ஸ் குழுவினரும் 'பவனி' வந்ததை ஹாக்கி ரசிகர்கள் வரவேற்கிறார்களா, பாரு! ஒருத்தர் கூட கைதட்டி ஆமோதிக்கலையே! இறுதி ஆட்டத்தில் ஒரு 'முடிவு' தெரியல்லேன்னு, அப்புறம் ஆட்டத்திலே சுவாரசியம் எப்படி இருக்கும்? ஹாக்கி எப்படி உருப்படும்!'' என்று ஆதங்கப்பட்டார் முதியவர்.

— குண்டுமணி

---

## அறுவைக் கேள்விகள் ஐந்து!

(1) தயிர் ஏன் வெள்ளையாக இருக்கிறது?

(2) இன்னும் கொஞ்ச நாட்களில் உலகப் படத்தில் இந்தியா இருக்காது ஏன்?

(3) பகல் பார்க்கில் எப்போதும் இருட்டாகவே இருக்காது. ஏன்?

(4) வாழைப்பழத் தோலுக்கும் சிப்புக்கும் சிறிய வித்தியாசம்தான். அது என்ன?

(5) சென்னையில் அதிகம் முட்டை சாப்பிடுபவர்கள் எங்கே இருக்கிறார்கள்?

## பதில் அறுவை :

(1) தோய்க்கிறோம் இல்லையா? அதனால் வெள்ளையாக இருக்கிறது.

(2) Nation is on the move - போய்க் கொண்டே இருந்தால்...?

(3) அருகில் பிரகாசம் ரோடு இருக்கிறது.

(4) வாழைப்பழத் தோல் காலை வாரிவிடும். சீப்பு தலையை வாரிவிடும்.

(5) எக்மோரில் Eg(g)more இருப்பவர்கள்.

-கே.ஆர்.



# பிறந்த 3ம் மாதம் தொடங்கும் முதல் திட உணவு குழந்தையின் வருங்கால வாழ்வையே தீர்மானிக்கத் தக்கது.

## பால் மட்டும் கொடுத்தால் போதாது என்கிறார்கள் டாக்டர்கள்



டாக்டர்கள் சிபாரிசு செய்வது

# ஃபாரெக்ஸ்®

**விரைவான முழு வளர்ச்சிக்கான சரிவிகிதச் சத்து நிரவிய திட உணவு**



பச்சிளம் தேகமும் மூளையும் வேகமாக வளரத் துடிப்பவை. அதற்கு ஈடுகொடுக்கப் பால் மட்டும் போதுமானதாகாது. தாய்ப்பாலிலிருந்து கெட்டி உணவுக்கு மாறவேண்டும்—மூன்றும் மாதமே: மென்றுதின்னப் பழக்குங்கள்...மேன்மையான வளர்ச்சிக்குத் திறவுகோலாக உதவும் திட உணவு ஃபாரெக்ஸ் ஒன்றுதான்—பச்சிளம் ஜீரண உறுப்புகளுக்கு உகந்தது.

**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்; காரணம்,**

தாய்ப் பால் விடுக்கும் தவ்வாய மாதங்களில் பாப்பாவின் பத்துவித வளர்ச்சிகளுக்கும் நிறைவுதரும் **ஒப்பற்ற சரிவிகிதச் சத்துணவு இதுவே.**

இரத்தச் செழிப்புக்கும் தென்புக்கும் நல்லுசிதமான அளவுக்கு (இதுபோன்ற வேறெந்தத் திட உணவிலும் அமையாத அளவுக்கு) இரும்புச் சத்து; எலும்புக்கு உறுதியும், பல்லுக்குப் பலமும் தரும் கால்ஷியம், வைட்டமின் D2; மூளையும் உடலும் விரைந்து வளர உகந்த புரத சத்துக்கள்; வளரும் உடம்புக்குத் தேவையான சக்தி—இவ்வளவும் அடங்கியது ஃபாரெக்ஸ்; எனவே... பாலூட்டும் பழக்கத்தை மாற்றுவதற்கான வேறு எந்த திட உணவையும் விட அதிகமாக அதிகத் தாய்மார்கள் ஆதரிப்பது ஃபாரெக்ஸ். பழங்கள், காய்கறிகள், பருப்பு, இறைச்சி, முட்டை போன்ற எந்த முக்கிய உணவுடனும் கலந்து கொடுக்க இனிமையானது ஃபாரெக்ஸ். மென்றுதின்னப் பழக்க...கூடிய விரைவிலே குடும்ப உணவுகளிடம் குழந்தையை இனிதே வரவேற்க...

**அதி உன்னதமான முதல் திட உணவு ஃபாரெக்ஸ்.**

**இலவசமான எமது ஃபாரெக்ஸ் கைப் புத்தகம், 2-ரூபா தள்ளுபடித் திட்டம்—இரண்டையும் பற்றி அறிய, எழுதுங்கள்.**

(புத்தகம் எந்த மொழியில் எனக் குறிப்பிட்டு) உங்கள் பெயர், விலாசத்தை எழுதி, 25 பைசா தபால் வில்லையோடு அனுப்புக இம் முகவரிக்கு: தபால் பை நம்பர் 19119, பம்பாய் 400 025.




க்ளாக்ஸோ

LIL.GF. 53-140 TM

# "ஆறுகால்" ஸ்தோத்திரம்

**10**



ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
சங்கராசாரிய ஸ்வாமிகள்

**ம**னத்தைச் சரியாக ஆக்கிக் கொண்டாலொழிய எவனும் சௌக்கியமாயிருக்க முடியாதென்பதால், அப்படிப் பண்ணிக் கொள்வதற்கான பிரார்த்தனையோடு ஆசார்யாள் ''ஷட்பதீ ஸ்தோத்ர''த்தை ஆரம்பிக்கிறார். வெளி சௌகரியங்கள் எத்தனை இருந்தாலும் மனசு நல்லபடியாக இருந்தால்தான் பிரயோஜனமுண்டு; இல்லாவிட்டால் துக்கம்தான், அழுகைதான், பயமும் சஞ்சலமும் தான். வெளி சௌகரியங்கள் எதுவுமே இல்லாவிட்டாலும் கூட, மனசு மட்டும் இருக்க வேண்டிய மாதிரி இருந்து விட்டதோ, அப்போது ஒரு கஷ்டமும் தெரியாது. ''இன்பமே எந்நாளும் துன்பமில்லை'' என்று அப்பர் ஸ்வாமிகள் சொன்ன மாதிரி ஆனந்தமாக இருந்து கொண்டிருக்க முடியும். மனசு நல்லபடியாக இருப்பது என்றால் என்ன? எப்போது பார்த்தாலும் அது வேண்டும்; இது வேண்டும்; இப்போது இருக்கிற சௌகரியங்கள் போதாது; பொருள், பதவி, பேர் என்று ஓயாமல் எதற்காவது மனம் ஆசைப்பட்டுக் கொண்டே இருக்கிறது. அதாவது அதிருப்திப் பட்டுக் கொண்டேயிருக்கிறது. வேண்டியது கிடைத்து விட்டது என்றும் திருப்தியாக நிறைந்திருக்க அதற்குத் தெரிகிறதோ? இல்லை. இன்னம் ஏதாவது தேவையை சிருஷ்டி பண்ணிக் கொண்டு அதற்காக அலையத்தான் செய்கிறது. இப்படியில்லாமல் மனசு திருப்தியாக, நிறைந்து இருந்து விட்டால் அப்போதுதான் சரியாக இருக்கிறது என்று அர்த்தம். ஆசை, அதனால் வருகிற அதிருப்தி, த்வேஷம், போட்டி, பொறாமை, துக்கம் இவை உள்ளவரை எத்தனை கோடீச்வரனானாலும், மஹாபண்டிதனானாலும் ஒருத்தனுக்கு சாந்தியும் இல்லை, சௌக்கியமும் இல்லை. 'சாந்தமு லேக சௌக்கியமுலேது' என்று தியாகையர்வாளும், 'அசாந்தஸ்ய குத: ஸுகம்' என்று கிருஷ்ண பரமாத்மாவும் சொன்ன மாதிரி (கீதா வாக்கியத்தை நினைத்துக் கொண்டேதான் தியாகையர்வாள் இப்படிப் பாடியிருக்கிறார் என்று தோன்றுகிறது) மன நிறைவினால் ஏற்படும் நிம்மதியில்லாமல் நிஜமான சௌக்கியம் என்பது இல்லவே இல்லை.

வெளியே பார்ப்பதற்கு ஒரு குடம் அழகாக இருக்கிறது. ஆனாலும் அதற்கு அடியிலே நாலு சின்ன ஓட்டை இருந்து விட்டால், உள்ளே அமிருதத்தைப் பிடித்து வைத்திருந்தால்கூட எல்லாம் ஒழுகித்தானே போகும்? அந்த மாதிரிதான், வெளிப்பார்வைக்கு நாம் ரொம்ப சரியாக இருக்கிற மாதிரி தோன்றலாம். பணம், படிப்பு, மற்ற லௌகிகமான சந்தோஷங்கள் நமக்கு யதேஷ்டமாக இருக்கலாம். ஆனாலும் அதிருப்தி, கோபம், பொறாமை, அழுகை மாதிரியான நாலு பொத்தல் நமக்குக் கண்ணுக்குத் தெரியாமல் இருந்து விட்டால் கூட ஆனந்தம் என்கிற அமிருதத்தை நமக்குள் பிடித்து வைத்துக் காப்பாற்றிக் கொள்ள முடியாது.

'ஆகையினால்தான் ஆசார்யாள் ''ஷட்பதீ ஸ்தோத்திரம்'' ஆரம்பிக்கும் போதே நம் மனஸிலிருந்து கெட்ட உணர்ச்சி வேகங்கள், அசுத்தங்கள் எல்லாம் போய், அது சுத்தமாக ஆவதற்கு பகவானிடம் பிரார்த்தித்து அவன் கிருபையாலேயே இதைச் சாதித்துக் கொள்ளலாம் என்று வழி காட்டியிருக்கிறார்:

**அவிநயம் அபநய விஷ்ணோ**
**தமய மன: சமய விஷய ம்ருகத்ருஷ்ணாம்।**
**பூத தயாம் விஸ்தாரய**
**தாரய ஸம்ஸார ஸாகரத: ॥**

முதலில் 'அவிநயம் அபநய' என்று ஆரம்பிக்கிறது. விநயம் என்ற வார்த்தை எல்லோருக்கும் தெரிந்திருக்கும். அதற்கு முன்னாடி ''அ'' என்று சேர்த்தால் விநயத்துக்கு Opposite (எதிர்மறை) என்று அர்த்தம். விநயம் என்றால் பணிவாக, அடக்கமாக இருப்பது. 'அவிநயம்' என்பது திமிராக, மரியாதையில்லாமல் இருப்பது. 'அபநய' என்றால் 'போக்கு' என்று அர்த்தம். 'உபநயனம்' என்று ஒரு வார்த்தை சொல்கிறோம். ஒரு பையனுக்குப் பூணூல் போட்டுக் குருகுலவாஸம் பண்ணுவதற்காக ஆசாரியாரின் ''இடத்தில் கொண்டு விடுவது'' என்று அர்த்தம். ஒன்றிடம், இன்னொன்றைக் கொண்டு சேர்ப்பது 'உபநயனம்'. அதற்கு Opposite (எதிர்மறை) தான் 'அபநயனம்.' அதாவது ஒன்றிடம் இருப்பதை அதிலிருந்து பிரித்துத் தள்ளி விடுவது 'அபநயனம்'. நம்மிடம் இப்போது திமிர்த்தனம், கொழுப்பு, அடங்காமை (அவிநயம்) இருக்கிறது. இதை நம்மிடமிருந்து பிரித்துத் தள்ளுமாறு, (அபநயனம் செய்யுமாறு) ஸாக்ஷாத் ஸ்ரீ மஹா விஷ்ணுவிடம் ஆசார்யாள் பிரார்த்திக்கிறார்.

**அவிநயம் அபநய விஷ்ணோ!**

''விஷ்ணோ — ஹே விஷ்ணுவே!'' என்று நேரே பகவானை நிறுத்தி வைத்துக் கூப்பிடுகிற மாதிரி கூப்பிட்டுப் பிரார்த்திக்கிறார். 'ஜனங்களுக்கு இருக்கிற தோஷங்களைப் போக்கடி' என்று அவர் வேண்டிக் கொள்ளவில்லை. நம்முடைய தோஷங்களையெல்லாம் தம்மிடமே இருக்கிற மாதிரி பாவித்து, தம் ஈச்வரத்துவத்தைக் குறைத்துக் கொண்டு, தமக்காகவே வேண்டிக் கொள்கிற மாதிரி பிரார்த்திக்கிறார். (தொடரும்)

**திருத்தம்: இத் தொடரில் சென்ற வாரம் அத்தியாயம் எண் 9 என்று திருத்திக் கொள்ளவும்.**
—ஆசிரியர்



# ராஜாஜி
## வாழ்க்கை வரலாறு

பதிவாகியுள்ள தென்னிந்தியப் பஞ்சங்களுள் மிக மோசமானது 1876 முதல் 1878 வரை இரு ஆண்டுகளுக்கு நிலவிய ஒன்றுதான். வைஸ்ராய் லார்ட் லிட்டன் கல்கத்தாவிலிருந்து சேலத்துக்கும் பிறகு கோவைக்கும் 1877 செப்டம்பரில் பயணப்பட்ட போது சேலம் ஜில்லாவில் மட்டும் பஞ்சத்தால், 1,36,941 மரணங்கள் சம்பவித்ததாகப் பதிவாகியுள்ளதைக் கண்டார்.[1] வறட்சி நிலையைத் தொடர்ந்து காலமற்ற காலத்தில் மழை கொட்டிப் பயிர்களை மூழ்கடித்தது. இதையடுத்து வெட்டுக்கிளிகளின் படையெடுப்பு! அவை "சில சதுர மைல்கள் பரப்புள்ளவையாக அமைந்து பறக்கும் போது வானையே மறைத்தன"[2] ஆண்டவன் கருணையால் 1878ம் ஆண்டின் வடகிழக்குப் பருவக் காற்றும் மழையும் பொய்க்கவில்லை. அந்த ஜில்லா, "அன்று வரை கண்டிராத அருமையான விளைச்சலைப் பார்த்தது. காலியான தானியக் கிடங்குகள் மீண்டும் நிரம்பின. விலைவாசிகள் குறைந்தன. களைப்புற்றிருந்த அதிகாரிகள் பலரும் பாரம் இறங்கி நிம்மதி பெற்றார்கள்."[3]

இப்படி சுபிட்சம் திரும்பிய சமயத்தில்தான் ராஜகோபாலாச்சார் பிறந்தான். ராஜன் எனப் பெற்றோரால் அழைக்கப்பட்ட குழந்தை கிராமப் பள்ளிக்குச் சென்றான். ஆற்றங்கரையின் மணல் பாங்கான பகுதிகளில் கோலி ஆடினான். குறிப்பிட்ட ஒரு புளிய மரத்துக்கு அடிக்கடி விஜயம் செய்வான். அந்தப் புளியம் பழத்தில் இனிப்புச் சுவையும் தூக்கலாக இருந்தது. பண்டாரம் ஒருவன் வாசித்துக் கொண்டு வந்த வாத்தியத்தை வாங்கிக் கொடுத்தால்தான் ஆயிற்று என்று அப்பாவிடம் பிடிவாதம் பிடித்து வெற்றி கண்டான். ஒருசமயம் அவன் கொடியில் உலர்த்தியிருந்த ஒரு துணிக்கு நெருப்பு வைத்து விட்டு மேலே துள்ளிப் பாயும் தீயை வேடிக்கை பார்த்தான். "இந்த வேடிக்கையைத் தன்னுடன் பகிர்ந்து கொள்ளுமாறு"[4] அவனால் அழைக்கப்பட்டிருந்த அத்தை சற்று நேரத்துக்குள் அதை அணைத்து விட்டாள்.

தன் தாயார் சிங்காரம்மாவுக்கு அவன் சில சமயங்களில் உதவுவான். அவள் ஆற்றில் தண்ணீர் எடுத்து வரப் போகும் போது மணல் சரிவில் அவளுடன் ஓடுவான். சிங்காரம்மா அவனுக்குக் கூறிய கதைகள் வேடிக்கையாகவும் இருந்தன; போதனைகளாகவும் அமைந்தன. இரு அத்தைகளும் அவ்வாறே கதைகள் கூறினர். சிறுவன் வளர வளரச் சிங்காரம்மா அவனுக்கு உபயோகமான யோசனைகள் கூறினாள். அவற்றுள் ஒன்றினைப் பல்லாண்டுகளுக்குப் பிறகு ராஜாஜி நினைவு கூர்கிறார்:[5] "எதன் மீது ஏறவேண்டுமோ அத்துடன் ஒட்டினாற் போல் ஏணியை வைக்கக் கூடாது; ஸ்திரமான ஒரு கோணத்தில் வைக்க வேண்டும்."

### உத்தியோக உயர்வு

பஞ்ச காலத்தில் வேங்கடார்யாவின் திறமைகள் வெளிப்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் 1883-ல் ராஜனுக்கு நாலு வயதான போது அவர் ஒசூரின் முன்சீப் ஆக்கப்பட்டார். இந்தப் பதவி உயர்வு முக்கியத்துவம் வாய்ந்தது. ஒரு காலத்தில் பட்டுக்குப் பெயர் பெற்றிருந்த ஒசூர், தாலுக்கா தலைநகர். அச்சமயம் அதன் ஜனத்தொகை ஐயாயிரத்துக்கும் அதிகம். தொரப்பள்ளியிலிருந்து பெங்களூரை நோக்க அது ஆறுமைல் தூரத்தில் இருந்தது. குடும்பம் மாட்டு வண்டியில் குடிபெயர்ந்தது.

வேங்கடார்யாவை அவரது குடும்பப் பெயரை யொட்டி சக்கரவர்த்தி ஐயங்கார்

1. F. J. Richards, 'Salem' vol. I Govt. Press Madras. 1918 P. 305.
2. Le Fanu, "A Manual of Salem District, Govt. Press Madras. 1883 P. 128.
3. Le Fanu P. 129.
4. சுயராஜ்யாவில் ராஜாஜி 17-6-61.
5. சுயராஜ்யாவில் ராஜாஜி 9-11-63.

என்றே அழைத்தனர். அவர் நல்ல உயரம். மாநிறம்; கம்பீர நடை; மழுங்கச் சிரைத்த தலை; உச்சிக் குடுமி. அனைவரும் சொற்படி கேட்க வேண்டும் என்று எதிர்பார்க்கிற சுபாவத்தை உணர்த்தும் சுருண்ட உதடுகளை உடைய நீள் வட்ட முகம்.

ஒசூர் முன்சீப் சக்கரவர்த்தி ஐயங்காருக்கு மாதச் சம்பளம் ஐந்து ரூபாய். அவர் பணத்தை விடக் கௌரவமே அதிகம் சம்பாதித்தார். முன்னதைச் செலவிடுவதில் ஜாக்கிரதையாகவும் இருந்தார். அவரது சிக்கனம் சில சமயம் அத்துமீறிப் போயிற்று. ஒருசமயம் அவரை அதிர்ச்சிக்குள்ளாக்கிப் பணத்தைத் தளர்த்தச் செய்ய முயன்ற சிங்காரம்மா, நகைகளையெல்லாம் கழற்றி விட்டு நின்றாளாம்!

### வெள்ளைக்கார ஆட்சியாளர்கள்

சக்கரவர்த்தி ஐயங்காருக்கு ஆங்கிலம்பேசத் தெரியாது என்றாலும் சேலம் ஜில்லாவின் பிரிட்டிஷ் அதிகாரிகளை அவர் அணுக முடிந்தது. அவர்களும் தேவைஏற்பட்டபோது அவர் வீட்டுக்கு வந்தார்கள். குதிரை பூட்டிய தங்கள் சாரட்டில் அவரை ஏற்றிக்கொண்டு போனார்கள். அவர் அதிகாரிகளுக்குத் தங்கு தடையின்றி ஆலோசனைகள் வழங்கினார். இவ்வாறு சக்கரவர்த்தி ஐயங்கார் ஆங்கிலேயர் ஆட்சியின் நடைமுறைக்கு ஒத்துப் போன போதிலும் பரம்பரைப் பண்பாடுகளை விட்டு விடவில்லை. தமிழ், தெலுங்கு இரண்டிலும் அவருக்குச் சரளமான அறிவுண்டு. சம்ஸ்கிருத நூல்களைத் தெலுங்கில் எழுதிப் படித்துச் சுமாரான ஞானம் பெற்றிருந்தார். அவரது இந்தச் சம்பத்தைப் பிறரும் பயன்படுத்திக் கொண்டனர்.

கண்டிப்புடன் பார்க்கப் போனால் ஆங்கிலேயருடன் பழகுவதென்பது ஆசாரக்குறைவு தான் இருந்தாலும் அவர்கள் ஆள்கிறவர்கள். ஆள்கிறவர்களிடம் விஷ்ணு அம்சம் உண்டு. இந்த நம்பிக்கை காரணமாகத் தான் பல பிராமணர்கள் திப்பு, ஹைதர் ஆகியோரிடமும் பணியாற்றினர். இதுவே சக்கரவர்த்தி ஐயங்கார் போன்று ஆசாரம் பார்த்த பல பிராமணர்களும் பிரிட்டிஷ் அரசிடம் பணியாற்றுவதைச் சாத்தியமாக்கியது.

1858-ல் ஒசூரில் தொடங்கப்பட்ட அரசினர் பள்ளியில் சிரத்தையுடன் படிக்கும் மாணவனாக முன்சீப் மகன் விளங்கவில்லை. ஆனால் இதற்கு முக்கிய காரணம் அவனது கிட்டப் பார்வைதான். அது மிகவும் தீவிரமடைந்திருந்ததால் கரும்பலகை கலங்கலாகத் தெரிந்தது. அதில் உபாத்தியாயர் எழுதியதோ எதுவுமே தெரியவில்லை. தகப்பனாரை மூக்குக்கண்ணாடி வாங்கித் தருமாறு அவன் கேட்ட போது கண்டிப்புமிகுந்த அவர் மறுத்து விட்டார். ஒசூரில் நாற்பத்தைந்து வயதுக்குட்பட்ட யாரும் மூக்குக் கண்ணாடி அணிந்திருக்கவில்லை. எனவே தம் மகன் வெற்றுப் பெருமைக்காகக் கண்ணாடி கேட்கிறான் என்றே அவர் நினைத்தார்.

தன் வயதொத்த பிற பையன்களை விட ராஜன் உருவத்தில் சிறியவனாகவும் பலத்தில் குறைந்தவனாகவுமே இருந்தான். நீண்டு மெலிந்த முகமும் கழுகு மூக்கும் உடைய அவன் தனது கண்களில் இருந்த குறைபாடு விளையாடுவதையும் சிரமமாக்கியதை உணர்ந்தான். நீச்சல் பழகுவதில் அவனால் வெற்றி பெற முடியவில்லை. ஆனால் அனுமத் பக்தி கொண்ட விநோதமான முஸ்லிம் ஒருவரிடம் மல்யுத்தப் பிடிகள் சிலவற்றைப் பயின்றான். ராஜனுடைய வீட்டிலிருந்து ஒரு மைல் தூரத்

# ராஜ்மோகன் காந்தி





மேலே: ராஜாஜி, ராமராவ் ஆகியோருக்கு இடையில் சதாசிவம்.
இடது: பேராசிரியர் டெக்ட்.

யில் பாறையில் செதுக்கப்பட்ட அனுமான் உருவம் ஒன்று உண்டு. இன்னும் இருக்கிறது. பயிற்சியாளரும் மாணவனும் அதைத் தரிசிக்க அடிக்கடி போவார்கள்.

### ராஜன் பெங்களூர் செல்கிறான்

பின்னால் 1948-ல் தேராதூன் இந்திய ராணுவ அகாடமி மாணவர்களிடம் உரையாற்றும்போது ராஜாஜி, ''வயதான, நேர்த்தியான முஸ்லிம் தேகப்பயிற்சியாளர்'' என்று நினைவு கூர்ந்தது இவராகத்தான் இருக்க வேண்டும்: ''நீங்கள் இப்போது செய்வதையெல்லாம் அன்று நான் செய்ய வேண்டும் என்று அவர் அரும்பாடு பட்டார் ... என் பயிற்சியாளருக்கு என்னிடம் ரொம்பப் பிரியம்... அவர், 'என் பக்கத்தில் வந்து நின்று மற்றவர்கள் உடற்பயிற்சி செய்வதைப் பார்' என்பார்.''[6]

பள்ளிப் படிப்பில் ராஜனுக்கு ஏற்பட்ட தடங்கல் மட்டம் போடத் தூண்டியது. அதனால் பொழுது முழுமையும் வீணானதாகக் கூற முடியாது. ராஜன் வயல் வரப்புக்களில் நடந்தான். குடியானவர்களும் அவர்களுடைய கால்நடைகளும் நடந்து கொள்ளும் விதங்களைக் கவனித்தான். இளம் வயதிலேயே அவன் ஒரு நகரில் குடியேறப் போகிறவன்தான் என்றாலும் கிராமப்புற வாழ்க்கைக்குப் பழக்கப்பட்டவனாகவே சென்றான்.

எதிர்காலத்தில் சமையலறையில் ஒரு பிடி அரிசி களைந்து போடப்படும்போதெல்லாம் அவனுக்கு இந்த அரிசி மணிகளை உருவாக்கிய குடியானவர்களின் நினைவு வரும். நாற்று நடுவதிலும் களைபிடுங்குவதிலும் உழைக்கும் பெண்களின் ஞாபகம் வரும்.[7]

தம் மகனின் கண்களில் இருந்த குறைபாட்டினை உணர முன்சீப்புக்குக் காலதாமதமானாலும் அவனுடைய புத்திசாலித்தனத்தைச் சீக்கிரமே உணர்ந்து விட்டார். அவனுடைய படிப்புக்காகச் சேமிக்கவும் செய்தார். நடுநிலைப் பள்ளிக்கு அதிகமாக ஓசூரில் படிக்க வாய்ப்பேதும் இல்லை. ஆனால் பெங்களூர் அருகிலேயே இருந்தது. அதில் பிரிட்டிஷாரால் நடத்தப்பட்ட மத்தியக் கல்லூரி, பையன்களை மெட்ரிகுலேஷனுக்கும் பட்டப் படிப்புக்கும் தயாரித்தது. அரண்மனைகளும் பூங்காக்களும் வர்த்தகமும் கல்வியும் மிகுந்த இந்த நகரத்துக்குத்தான் தம் மகனை அனுப்ப வேண்டும் என்று சக்கரவர்த்தி ஐயங்கார் தீர்மானித்து விட்டார். பெங்களூர் நகர வாழ்க்கையில் இணைக்கப்பட்ட கிராமச் சிறுவனுக்கு வயது பதினொன்று.

## 2. மாணவப் பருவமும் திருமணமும்

பெங்களூர் சிக்பெட் பகுதியில் பிராமணர்களுக்காக நடந்த விடுதி யொன்றில் ராஜன் படுத்துறங்கினான். அய்யங்கார் ஒருவர் நடத்திய உணவுச் சாலையில் சாப்பிட்டான். கட்டுக் குடுமியில் பேன் வந்த போது அம்மா அருகிலிருந்து தன்னைக் கவனித்துக் கொள்ள முடியவில்லையே என்று ஏங்கினான்.

இரண்டு வருஷங்கள் மத்தியக் கல்லூரியில் கழிந்த பிறகு பதின்மூன்றாவது வயதில் ராஜன் மெட்ரிக் தேறினான். அவனைவிடப் பன்னிரண்டு வயதும் ஆறு வயதும் மூத்தவர்களான இரு சகோதரர்களும் இதே சமயத்தில் மெட்ரிக் தேறினார்கள். ஆனால் மத்தியக் கல்லூரி மாணவர்களாக அல்ல. ராஜன் மெட்ரிக் எழுதிய 1891-ம் ஆண்டில் அந்தப் பரீட்சைக்கு அமரத் தகுதி படைத்தவர்கள், தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னட ஜில்லாக்களை உள்ளடக்கிய சென்னை ராஜதானியில் 8051 பேர் இருந்தார்கள்.

ராஜனுக்குப் பதின்மூன்று வயதான போது வேறு இரு சம்பவங்களும் நிகழ்ந்தன. ஒன்று அவனுக்கு மூக்குக்கண்ணாடி கிடைத்தது. ஒருவழியாக முன்சீப் தமது மகனின் தேவைக்கு இணங்கி விட்டுக் கொடுத்து விட்டார். அதன் பயனாக ராஜனுடைய வாழ்க்கையே மாறி விட்டது. பசுமை என்றால் என்ன என்பதே அவனுக்கு இதுவரை சரியாகத் தெரியாமல் இருந்தது. நட்சத்திரங்களை ''ஏதோ மங்கலான பனிமூட்டம் போன்ற ஒளியாகக்'' கண்டு வந்தான். இப்போதோ கூரிய முனைகளும் மூலைகளும் நிறங்களும் உடையவையாக அவை விளங்கின. அதிகாலையில் எழுந்ததும் இலைகள், மரங்கள் ஆகியவற்றின் வடிவங்களைப் பார்ப்பதும் அற்புதமான அனுபவமாக இருந்தது.[8] இரண்டாவது நிகழ்ச்சி அபூர்வமான ஒரு நட்பின் தொடக்கம்.

### ராம ராவ்

மகாராஷ்டிரத்திலிருந்து வந்து மைசூரில் குடியேறியவர்களின் வம்ச பரம்பரையில் தோன்றிய நவரத்ன ராம ராவ் ராஜனைவிட இரண்டு வயது பெரியவன். ஆனால் மத்தியக் கல்லூரியில் ராஜனைவிடத் தாழ்ந்த வகுப்பில் இருந்தான். ராமராவின் அறிவாலும் தேஜஸாலும் ஆங்கில இலக்கியத்தில் அவனுக்கிருந்த பரிச்சயத்தாலும் கவரப்பட்ட ராஜன் வலுவில் சென்று அவனுக்கு நண்பனானான்.

ஓர் உணவுச் சாலைக்கு மேல் இருந்தது ராமராவின் அறை. அவன் நட்பைக் கோரும் ஒரு கடிதத்தை அங்கே போட்டு விட்டு வந்தான் ராஜன்.[9] பதின்மூன்று வயதேயான மென்மையான மனத்துக்கு இது துணிகரமான செயல்தான். அலட்சியத்துக்குள்ளாகும் ஆபத்து அதில் இருந்தது. ஆனால் ராம ராவ் நட்பை ஏற்றான், கொடுத்தான்.

கல்லூரியில் இருவரும் சேர்ந்தமாதிரி நிறையப் படித்தார்கள். பெரும்பாலும் ராமராவே படிக்க ராஜன் கேட்பான். ''எங்கள் இருவரில் ராமராவே அதிக ரசனை உள்ளவன்'' என் ராஜாஜியே பின்னால் ஒரு முறை

6. ஹிந்துஸ்தான் டைம்ஸ் 10-10-48
7. சுயராஜ்யாவில் ராஜாஜி 24-2-68.
8. Monica Felton, I meet Rajaji: P. 24.
9. சுயராஜ்யாவில் ராஜாஜி 17-12-60

கூறியிருக்கிறார். இருவரும் நகைச்சுவையை ரசித்துச் சிரிப்பார்கள். தத்துவ விசாரணையில் இறங்குவார்கள்; ஒருவருக்கொருவர் சொல்லிக் கொடுத்துக் கொள்வார்கள். ராஜாஜியின் வார்த்தைகளிலேயே கூறுவதானால் ''எங்கள் நட்பு ஓர் அதிசயமாகவும் மர்மமாகவும் எங்கள் கல்லூரித் தோழர்களுக்கு விளங்கியது. என்றாலும் அதைப் பொறுத்துக் கொண்டு எங்களைச் சூழ்ந்து நின்றார்கள்.''[10] எழுபதாண்டு காலம் நீடித்த நட்பு இது.

இருவருக்கும் பிடித்தமான ஆசிரியர்கள் என்று பட்டியல் போட்டால் அதில் எளிதாக முதலிடம் பிடிப்பார் ஜான் கத்ரி டெய்ட்.[11] பிற்காலத்தில் ராஜாஜி ஸ்காட்டிஷ்காரரான இந்தப் பேராசிரியரைப் பற்றிப் பேசும் போதெல்லாம் அவர் முழுப் பெயரைத்தான் காலத்தால் குறையாத ஆசையோடும் மரியாதையோடும் உச்சரிப்பார்.

''இலக்கியத்தை அறியவும் அதனிடம் அன்பு செலுத்தவும்'' இளைஞர்களுக்கு டெய்ட் கற்றுத் தந்தார். வலது கரம் கொடுப்பது இடது கரத்துக்குத் தெரியாத மாதிரி உபகாரம் செய்வார். ''நல்லிதயமும் தைரியமும் கண்ணியமும் மிக்க லட்சிய புருஷராக அவர் மாணவர்களுக்கு விளங்கினார்.''[12] ராஜனே அவரிடம் உதவி பெற்றிருக்கிறான். பெங்களூரில் வாழ்ந்து உணவருந்திக் கல்வி கற்கத் தேவையான தொகைக்கும் தகப்பனார் அவ்வப்போது அனுப்பிய பணத்துக்கும் சம்பந்தமே இல்லாதிருந்தது. கல்லூரியில் கிடைத்த உபகாரச் சம்பளமும் டெய்ட்டின் சொந்தப் பணத்திலிருந்து கிடைத்த உதவியும்தாம் வித்தியாசத்தை இட்டு நிரப்பின.

பரீட்சைக்குப் படிப்பதென்பது ராஜனுக்குப் பிடிக்கவுமில்லை பழக்கமுமில்லை. இருந்த போதிலும் கல்லூரி முதல்வர் ஜான் குக், டெய்ட் ஆகிய இருவருக்கும் ராஜனையும் ராமராவையும் பிடித்திருந்தது என்பது தெளிவு. டெய்ட் தம்மிடம் படித்த மாணவர்கள் அனைவரிலும் அவ்விருவருமே சிறந்தவர்கள் என வர்ணித்தாராம். அவர்கள் தங்கி இருக்கக் கல்லூரி எல்லைக்குள்ளேயே ஓர் அறை ஒதுக்கப்பட்டது. அது அவர்களையே வியப்பில் ஆழ்த்தியது.

இந்தச் சலுகை வேறு எந்த மாணவருக்கும் வழங்கப்படவில்லை. எட்டடி சதுரமுள்ள அந்த அறையும் அதில் போடப்பட்டிருந்த இரண்டு பெஞ்சுகளும் சொகுசு வாழ்க்கையை அளிப்பவையாக அவர்களுக்கு விளங்கின. பெஞ்சுகள் பகலில் சோபாக்களாகும். இரவில் கட்டில்களாகப் பயன்படும். இந்தத் தனி அறையைப் பெற்றதில் பெருமையுற்ற இருவரும், அருணாசலம், பாபு ராவ், ரங்கநாத ராவ் போன்று மாணவர்களில் பொறுக்கியெடுத்த சிலரைத்தான் உள்ளே வர அனுமதித்தார்கள். கல்லூரி எல்லைக்குள்ளேயே வாழ முடிந்ததால் தோட்டக்காரர் ஹனுமந்தையா போன்று சில மனிதர்களின் தொடர்பு கிட்டியது. ஹனுமந்தையா சொற்ப சம்பளத்தில், பெற்ற தாயை இழந்த குழந்தைகள் அடங்கிய பெரிய குடும்பத்தைக் காப்பாற்றி வந்தார்.[13]

> சீனாவில் டைப்பிஸ்டாக உத்தியோகம் பார்ப்பதைப் போன்ற நரக வேதனை கிடையாது. 7,100 அக்ஷரங்களைக் கொண்டது சீன மொழி டைப்ரைட்டர். ஒரு டைப்பிஸ்ட் ஒரு நிமிடத்துக்கு அந்த டைப்ரைட்டரில் இருபது வார்த்தைகள் அடிக்கிறாரென்றால், அவர் திறமைசாலி! -ஃபன்னி ஃபன்னி வேர்ல்டு
>
> ஆர். எம்.

பல்லாண்டுகளுக்குப் பிறகு ராஜாஜியும் ராமராவும் நினைவுகூர்ந்து எழுதினார்கள்: ''நாங்கள் அடிக்கடி புல்வெளியில் படுத்து இரவின் ஒரு பகுதியைக் கழிப்போம். நட்சத்திரங்கள் சிதறிக் கிடக்கும் வானத்தை அல்லது சந்திரன் பவனி வரும் வானத்தைப் பார்த்துக் கொண்டிருப்போம். உல்லாசமான அல்லது கனமான விஷயங்களைப் பேசிக் கொண்டிருப்போம். இரவு பன்னிரண்டு ஆனதைக் கடிகாரம் மணி அடித்துத் தெரிவிக்கும்.

''ஓர் இரவு ஆவி வடிவங்கள் ஏதுமிருந்தால் எங்களை அணுக வசதியாகத் திறந்த வெளியிலேயே தூங்கினோம். அவை எங்கள் அழைப்பை ஏற்கவில்லை. ஆனால் சில்லென்று வீசிய காற்று எங்கள் மெல்லிய போர்வைகளைப் பரிகசித்தது. ரொம்ப சுகமாய் இருப்பதாக ஒருவருக்கொருவர் சத்தியமே வைத்த போதிலும் மறுபடியும் அந்த ஆனந்தத்தை அனுபவிக்க வேண்டாம் என்றும் உறுதியாகத் தீர்மானித்தோம்.''[14]

## சகோதரன் திருமணம்

ராஜன் விடுமுறை நாட்களை ஒசூரில் அல்லது தன் தாயாரின் உறவினர்கள் வசித்த குப்பம் கிராமத்தில் கழித்தான். அவன் கற்பனையுள்ளம் கொண்டிருந்ததாகத் தெரிகிறது. ஒரு சமயம், பிசாசு போன்று முகமூடி அணிந்து குழந்தைகள் கூட்டம் ஒன்றை அவன் பயமுறுத்துவதையும் பிறகு தன்னை வெளிப்படுத்திக் கொள்வதன் மூலம் அவர்களிடம் இருந்த பிசாசு பயத்தைப் போக்குவதையும் குப்பம் ஜனங்கள் பார்த்தார்கள்.

ஒரு மாட்டு வண்டியில் ராஜனும் அவன் பெற்றோரும் அவனது மூத்த சகோதரன் நரசிம்மாச்சாரின் திருமணத்துக்காக மணமகளின் கிராமத்துக்குச் சென்றனர். கல்யாணக் கோலாகலங்களின் ஓர் அங்கமாக ஒரு கூத்தியின் நடனம் இடம் பெற்றிருந்தது. ''அவள் தன் கறுப்பு முகத்தில் வெள்ளைப் பூச்சுடன் அருவருப்பான தோற்றமுடையவளாக'' இருப்பதைப் பார்த்த ராஜன், ''மக்கள் இவளிடம் என்னத்தைக் கண்டிருக்கிறார்கள் என்று அதிசயித்தான்.''[15]

(தொடரும்)

(தமிழாக்கம்: **வெ. ராஜேந்திரன்**)

---

10. சுயராஜ்யாவில் ராஜாஜி 17-12-60
11. Our college Reminiscences by C. Rajagopalachari and N. Rama Rao Central College Bangalore.
12. மேற்படி
13. மேற்படி.
14. மேற்படி.
15. பேரன் கோபாலகிருஷ்ண காந்தியுடன் ராஜாஜி உரையாடியபோது தெரிவித்தது.

**நடக்கவிருக்கும் பாராளுமன்றத் தேர்தலில் காங்கிரஸ் கூட்டணியும் ஜனதா கூட்டணியும், தொண்டர்படை பலத்துடனும், விளம்பர பலத்துடனும், பிரபல தலைவர்களின் பிரபையுடனும் ஒவ்வொரு தொகுதியிலும் மோதவிருக்கின்றன. இந்த அணிகளுக்கு இடையே சிலர் சுயேச்சையாகப் போரில் குதித்திருக்கிறார்கள். அவர்களில் சிலரைச் சந்தித்து, அவர்கள் எதற்காக, எந்தச் சூழ்நிலையில், எந்த நம்பிக்கையில், இந்த முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பினோம்!**

### திரு டி. ராகவன்

குடியாத்தம் தாலூக்கா ஆபீஸ் தலைமை குமாஸ்தாப் பதவியைத் துணிந்து மூன்றே நாள் வேண்டுகோளில் விட்டு விட்டு நடப்பு பாராளுமன்றத் தேர்தல் களத்தில் மூன்று தொகுதிகளில் சுயேச்சை வேட்பாளராகப் போட்டியிட முனைந்திருப்பவர் ராகவன்.

''நான் அரசாங்கத்துக்கு, மதுவிலக்கு நஷ்டத்தை ஈடுகட்டும் யோசனைகளையும், காவிரி நீர்ப்பங்கீடு பற்றிய யோசனைகளையும், அனுப்பி வைத்தேன். யோசனைகள் பாராட்டு பெற்றன. சில யோசனைகளை அமல் படுத்தினார்கள். ஆனால் அதற்காக எனக்கு அரசாங்கம் எந்த வித சன்மானமும் தரவில்லை.

''நான் இதற்காக மத்திய அரசின் நிதி அமைச்சகத்துக்கு நோட்டீஸ் கூடக் கொடுத்திருக்கிறேன். நம் யோசனைகளெல்லாம் நடைமுறை சாத்தியமாக்க, பாராளுமன்றத்தில் குரல் கொடுத்தால்தான் பலன் கிடைக்கும். அதற்காகத்தான் தேர்தலில் நிற்கிறேன்'' என்கிறார் ராகவன்.

''தென் சென்னைக்கு எனக்குச் சிங்கச் சின்னம். ஜெயித்தால் பாராளுமன்றத்தில் சிங்கம் போலக் குரல் கொடுப்பேன். அரக்கோணம் தொகுதியில் ஒட்டகம். மக்களின் தேவை என்ற சுமை

இந்தப் பக்கம்: 1. ராகவன், 2. பி. என். எஸ். மணி. 3. கே. நடராஜன், 4. சீனிவாசன்.

எதிர் பக்கம்: 5. வரததேசிகன், 6. வெங்கடேசன், 7. மாணக் சந்த் நாஹர். 8. பொற்செல்வி (வீனு பஜாஜ்)









# சொந்தக் குரல் எழுப்பும் சுயேச்சை வேட்பாளர்கள்!





யைத் தாங்குவேன். அங்கு வெற்றி பெற்றால். திருப்பத்தூர் தொகுதியில் ஓட்டம். அது வறண்ட பிரதேசம். அங்கே ஜெயித்தால் அவர்களுக்குப் போதுமான பாசன நீருக்கு வசதி செய்வேன்'' என்கிறார்.

## திரு எஸ். சீனிவாசன்

சென்னை விருகம்பாக்கம் பகுதியில் வசிக்கும் திரு எஸ். சீனிவாசன் வழக்கறிஞர். சென்னையிலும் டில்லியிலும் தொழில் நடத்துகிறார். தென் சென்னை பகுதியில் யானைச் சின்னத்தில் நிற்கிறார். இது இவருக்கு முதல் அனுபவம்.

இவருக்கு, பல்வேறு கட்சிகளுக்கிடையே, சமயத்துக்கேற்ப, துவேஷத்தின் அடிப்படையில் ஏற்பட்டிருக்கும் தேர்தல் கூட்டு பிடிக்கவில்லை. பல கட்சிகள் இணைந்து ஜனதா கட்சி என்று உருவாகி இருப்பதும் அவசர கால அஸ்திவாரமில்லாத ஏற்பாடுதான் என்று எண்ணுகிறார்.

இந்த மாதிரி சந்தர்ப்ப அரசியலை எதிர்ப்பதாகச் கட்டிக் காட்டவே இவர் சுயேச்சையாக நிற்கிறார்.

## டாக்டர் பொற்செல்வி (ஷீலு பஜாஜ்)

அரசியல் கட்சி அனுபவம் பெற்ற இச் சகோதரி தேர்தலுக்கு நிற்பது இதுதான் முதல் தடவை. எந்தக் கட்சியிலிருந்து பிரிந்து வந்தவர் என்பதைக் கூறிக் கொள்ள இவர் இப்போது விரும்பவில்லை!

''என் தேசிய உணர்ச்சி காரணமாகவும், கட்சி சார்பற்றவர்களின் வேண்டுகோள்களுக்காகவும், நான் இந்தத் தேர்தலில் போட்டியிட முன் வந்திருக்கிறேன். நடுத்தர மக்களின் வாழ்க்கைத்தரம் உயரவும், வேலையில்லாத் திண்டாட்டம் ஒழியவும் எல்லோரும்

















தேர்தலில் தோற்றுப் போனவர், தம்முடன் போட்டியிட்டு வென்றவருக்கு ஒரு தந்தி கொடுத்தார், டெலிபோன் மூலம்: "தாங்கள் வெற்றி பெற்றதற்கு என் மனமார்ந்த வாழ்த்துக்கள்!"

'அடடா! மனிதருக்குத்தான் எவ்வளவு பெருந்தன்மை!' என்று வியந்த தபால் நிலைய குமாஸ்தா, "சார், நீங்கள் கொடுக்கச் சொன்ன தந்திச் செய்தியைப் படிக்கிறேன், சரியாக இருக்கிறதா என்று பாருங்கள்" என்றார்.

உடனே, "வேண்டாம்; என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளாதே" என்று கத்தினார் 'வாழ்த்தியவர்'.

-ஆர்.எம்.

---

சமயம் என்ற நிலை ஏற்படவும், நான் வெற்றி பெற்றால் முயற்சி செய்வேன்" என்கிறார்.

மத்திய சென்னை — சின்னம்: மண்வெட்டி.

## திரு பி. வேங்கடேசன்

பர்மாவில் பிறந்து வளர்ந்த வேங்கடேசன் 1964-ம் ஆண்டில் பரிவர்த்தனை காரணமாகத் திரும்பித் தாயகம் வந்து சேர்ந்தவர்.

இவர் ஓர் அரசியல்வாதியே அல்ல! — வேண்டுமானால் சமயவாதி, இலக்கியவாதி என்று சொல்லலாம். தெய்வ நெறியிலும் குறிப்பாகத் தாயுமானவரிடமும் நிறைய ஈடுபாடு கொண்டவர். பர்மா, இலங்கை அகதிகளின் சீரான மறுவாழ்வுக்காக 'மறுவாழ்வு' என்ற பெயரில் ஒரு பத்திரிகையே நடத்தி வருகிறார். பர்மாவிலிருந்து குடிபெயர்ந்தோர் சங்கத்துக்குத் தலைவர்.

அகதிகள் மறுவாழ்வு ஒன்றே குறிக்கோளாக இவர் இந்தத் தேர்தலில் நிற்கிறார்.

வட சென்னை — சின்னம்: மண்வெட்டி.

## திரு மானக் சந்த் நாஹர்

ராஜஸ்தானத்தைச் சேர்ந்த மானெக் சந்துக்கு வயது முப்பத்தி இரண்டு. கடந்த இருபது ஆண்டுகளாகத் தமிழக வாசியாக இருக்கிறார். எம். ஏ. பட்டதாரி. கவிதைகள் கதைகள் எழுதுகிறார். இன்ஷூரன்ஸ் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார். தமிழ் நன்றாகப் பேசுகிறார். தமிழ் பழமொழிகள் பற்றி ஆராய்ச்சி கூடச் செய்திருக்கிறார்.

இவர் அரசியல் வாதியே அல்ல! சமூக சேவையை மனத்தில் கொண்டு தேர்தலில் இறங்கி யிருக்கிறார்.

"ஜெயித்து விடுவேன் என்று உறுதி சொல்ல நான் தயாராயில்லை. ராஜஸ்தானத்தைப் பூர்வீகமாகக் கொண்ட நான் தமிழக மக்களின் நல்லெண்ணத்தைச் சம்பாதித்துக் கொண்டால் போதும், சந்தோஷப்படுவேன்!" என்கிறார் ஒட்டகச் சின்ன மானெக் சந்த். தொகுதி: வட சென்னை.

## திரு பி. என். எஸ். மணி

இரு காங்கிரஸ் பிரிவுகளிலும் சுயநல வாதிகளும், சந்தர்ப்பவாதிகளும், விளம்பரப் பிரியர்களும் மலிந்து விட்டார்கள் என்ற விஷயத்தைச் சுட்டிக் காட்டவே, காங்கிரஸ் பரம்பரையில் வந்தாலும், இன்று ஸ்வஸ்திகா சின்னத்தில் சுயேச்சை வேட்பாளராக மத்திய சென்னையில் நிற்கிறார். பிரதமர் இந்திரா காந்தியின் கரங்களை வலுப்படுத்தி ஒரு ஸ்திரமான அரசுக்கு வழி செய்வதே இவர் லட்சியம்.

தியாகி என்பதால் கிடைத்த பத்து ஏக்கரையும் தி. மு. க.வினர் கேலிப் பேச்சால் மனம் நொந்து அரசுக்கே திருப்பிக் கொடுத்தவர். தி. மு. க.வினரின் மாநில சுயாட்சி மகாநாட்டுப் பந்தல் முன் அதை எதிர்த்து உண்ணாவிரதமிருந்து கைதானவர்!

'கார்ப்பொரேஷன் ஊழலில் கறை படாத கையுடன் வெளிவந்தவரில் இவர் ஒருவர்' என்று இவரைத் தெரிந்தவர்கள் கூறுகிறார்கள்.

## திரு கே. நடராஜன்

சொந்தத்தில் அச்சகம் வைத்துத் தொழில் நடத்தும் நடராஜன், சைக்கிள் சின்னத்தில் தென் சென்னைப் பாராளுமன்றத் தேர்தலில் சுயேச்சையாகப் போட்டி யிடுகிறார். வயது முப்பத்தி ஆறு. சைக்கிளிலேயே போய் வாக்காளர்களைச் சந்திக்க நாலு நண்பர்கள் உதவுகிறார்கள்.

பெரிய அரசியல் கட்சிகள், தங்கள் கட்சி உறுப்பினர்கள் மீது பெரிதும் ஆதிக்கம் செலுத்தும் தலைவர்களை உருவாக்கி, அவர்கள் சொல்கிறபடியே தொண்டர்கள் ஆட வேண்டும் என்ற நிலை வருங்கால சமுதாய வளர்ச்சிக்கு உகந்தது இல்லை என்பது நடராஜனின் கருத்து. இதனால் சுயமாகச் சிந்தனை செய்யவோ, நல்ல விஷயங்களைச் செயல்படுத்தவோ இயலாது என்பது இவரது வாதம்.

## திரு ஓ. ஏ. வரத தேசிகன்

திரு வரததேசிகன் தேர்தல் களத்தில் ஏற்கனவே நிறைய அனுபவம் பெற்ற விடாக் கண்டர். நாற்பத்தி ஆறு வயதான, இந்த யந்திர சாமான்கள் வியாபாரி, 1971ல் கிருஷ்ணகிரி தொகுதியில் நிதி அமைச்சர் திரு சுப்பிரமணியத்துக்கு எதிராகப் பாராளுமன்றத் தேர்தலில் நின்று பத்தொன்பதாயிரம் வோட்டுக்கள் வாங்கினார். ஆனாலும் டிபாசிட் போயிற்று.

அதேபோல் இடைத்தேர்தல் தேர்தலிலும் 1974ல் பாராளுமன்றத்துக்கு நின்றார். டிபாசிட் போயிற்று. இப்போது சென்னையில் இரண்டு தொகுதிகளில் நிற்கிறார். வட சென்னை — சைக்கிள் சின்னம். மத்திய சென்னை—சிங்கச் சின்னம்.

ஆளும் காங்கிரஸும் ஸ்தாபன காங்கிரஸும் முறையே அ.தி.அ.தி.மு.க., தி.மு.க. கட்சிகளுடன் செய்து கொண்டுள்ள தேர்தல் ஒப்பந்தங்களுக்கு ஆட்சேபனை தெரிவிக்கவே நிற்கிறார். "தெருவிலிருந்து மறுப்புச் சொல்வதை விட ஐந்நூறு ரூபாய் போனாலும் பரவாயில்லை என்று தேர்தல் களத்தில் குதித்தால்தான் எதிர்ப்பைக் காட்ட முடியும் என்பது இவர் கொள்கை.

'சுத்தமான ஜனநாயகம்தான் தேவையே ஒழிய மிசா ஜனநாயகம் தேவையில்லை' என்பது இவர் கோஷம். இதற்காக இவர் ஜனதா கட்சியின் பக்கம் சாய்ந்து விடவுமில்லை.

தம் காலில் நிற்கப் பழகிக் கொண்டவர். வலியைப் பொருட்படுத்தாமல் இருக்கவும் பழகிக் கொண்டவர்! —சோமஸ்வாமிநாதன்

# பார்த்திபன் கனவு

அமரர் கல்கி

## அத்தியாயம் 9

## விபத்தின் காரணம்

சக்கரவர்த்தியைக் குந்தவி வியப்புடன் நோக்கினாள். அவளுடைய மை தீட்டிய பெரிய கண்கள் அதிசயத்தினால் விரிந்து மலர்ந்தன. ''இது என்ன அப்பா, இது? கூத்தாடிகள் அல்லவா வேஷம் போட்டுக் கொள்வார்கள்? இராஜாக்களுக்கு எதற்காக வேஷம் போடும் வித்தை தெரிய வேண்டும்?'' என்று கேட்டாள்.

''ஒரு தேசத்தைப் பரிபாலிப்பவனுக்குப் பல கலைகளும் தெரிந்திருக்க வேண்டும் குழந்தாய்! முக்கியமாக வேஷம் போட்டுக் கொள்ளத் தெரிந்திருக்க வேண்டும். அப்போதுதான் பிரஜைகளின் மனோபாவங்களை அவ்வப்போது தெரிந்து கொள்ள முடியும். இன்னும், சத்துருக்களைப் பற்றிய இரகசியங்களையும் தெரிந்து கொள்ளலாம். நாட்டில் குற்றங்கள் நடக்காமல் தடுக்கலாம்....'' என்று சக்கரவர்த்தி சொல்லி வருகையில் குந்தவி குறுக்கிட்டாள்.

''இப்போது எந்தக் குற்றத்தைத் தடுப்பதற்காக இந்த வேஷம் போட்டுக் கொண்டீர்கள்? நான் ஏதாவது குற்றம் செய்யப் போவதாகச் சந்தேகமா?'' என்று சொல்லி முல்லை மலர்வதுபோல் பல் வரிசை தெரியும்படி நகைத்தாள்.

''சந்தேகமில்லை, குந்தவி! நிச்சயமாகப் பெரிய குற்றம் ஒன்று நீ செய்திருக்கிறாய். உன்னால் நேற்று இராத்திரி நாலு பேருக்கு மரணம் சம்பவித்தது!'' என்று சக்கரவர்த்தி சொன்னதும் குந்தவிக்குத் தூக்கிவாரிப் போட்டது.

''இதென்ன, அப்பா! எனக்கு ஒன்றுமே தெரியாதே!''

''ஆமாம்; உனக்கு ஒன்றும் தெரியாதுதான். அயல்தேசத்திலிருந்து வந்த இரத்தின வியாபாரி ஒருவனை நீ அரண்மனைக்கு வரச் சொன்னாயா?''

''ஆமாம் சொன்னேன், அது குற்றமா?''

''அவனிடம் நீ யாரென்று உண்மையைச் சொல்லாமல், குந்தவி தேவியின் தோழி என்று சொன்னதுண்டா?''

''உண்மைதான்; அதனால் என்ன?''

''அதனால்தான் ஆபத்து வந்தது. அந்த இரத்தின வியாபாரிக்கு நீதான் சக்கரவர்த்தியின் மகள் என்று யாரோ பிறகு சொல்லியிருக்கிறார்கள். அவன் இதில் ஏதோ அபாயம் இருக்கிறதென்று மிரண்டு போய் விட்டான். மிரண்டு அன்றிரவே உறையூருக்குக் குறுக்குக் காட்டுப்பாதை வழியாகக் கிளம்பிப் போனான்....''

''உறையூருக்கா?'' என்று குந்தவி கேட்ட குரலில் மிக்க ஆச்சரியம் தொனித்தது.

''ஆமாம், அதில் என்ன அவ்வளவு ஆச்சரியம்?''

''இல்லை, அப்பா! இரத்தின வியாபாரி காஞ்சிக்கு வராமல் உறையூருக்குப் போவானேன் என்று யோசித்தேன்; அங்கே அரண்மனையில் கூட ஒருவரும் இல்லையே!''

''அந்த இரத்தின வியாபாரியின் தாயார் உறையூரில் இருக்கிறாளாம். அவளைப் பார்ப்பதற்காகக் கிளம்பினானாம்....''

குந்தவி ஏதோ சொல்ல வாயெடுத்தவள், பல்லைக் கடித்துக் கொண்டு மௌனமானாள். அந்த இரத்தின வியாபாரி உண்மையில் விக்கிரமன்தானோ என்று அவள் மனத்தில் தோன்றியிருந்த சந்தேகம் ஊர்ஜிதமாயிற்று.

அந்தச் சந்தேகம் தன் தந்தைக்கும் ஒரு வேளை தோன்றியிருக்குமோ என்று எண்ணினாள். தான் ஏதாவது பிசகாகப் பேசி அவருடைய மனத்தில் சந்தேகத்தை எழுப்பக் கூடாதென்று தீர்மானித்துக் கொண்டாள்.

''என்ன அம்மா! யோசனை செய்கிறாய்?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''ஒன்றுமில்லை, அப்பா! பழைய ஞாபகங்கள் வந்தன. உறையூருக்கு முன் தடவை நாம் போயிருந்ததை நினைத்துக் கொண்டேன் .... இருக்கட்டும். அப்பா! அப்புறம் அந்த இரத்தின வியாபாரியின் கதையைச் சொல்லுங்கள்'' என்றாள்.

''காட்டுப் பாதையில் இரவில் போகும்போது அவனைத் திடீரென்று நாலு பேர் வளைத்துக் கொண்டு, வாளால் தாக்கினார்கள். ஆனால் அந்த இரத்தின வியாபாரி இலேசுப்பட்டவன் அல்ல; மூன்று பேரை அவனே தீர்த்துவிட்டான். நாலாவது ஆள் இந்த வாளுக்கு இரையானான்!'' என்று சக்கரவர்த்தி தம் வாளைச் சுட்டிக் காட்டினார்.

மிகுந்த வியப்புடனும் ஆர்வத்துடனும், ''நீங்கள் எப்படி அங்கே அந்தச் சமயம் போய்ச் சேர்ந்தீர்கள்?'' என்று கேட்டாள் குந்தவி.

''இல்லாவிட்டால் இந்தப் பெரிய சாம்ராஜ்யத்தை நிர்வாகம் செய்ய முடியுமா, குழந்தாய்?''

''ரொம்பத் தற்பெருமை அடித்துக் கொள்ளாதீர்கள்! 'நரசிம்ம சக்கரவர்த்தியின் இராஜ்யத்தில் திருட்டுப்புரட்டே கிடையாது!' என்னும் கீர்த்தி என்ன ஆயிற்று? காஞ்சிக்கும் மாமல்லபுரத்துக்கும் இவ்வளவு சமீபத்தில் திருடர்கள் ஓர் அயல் தேசத்து வியாபாரியைத் தாக்குவது என்றால்....!''

''நானும் உன்னைப் போல்தான் அவர்கள் திருடர்களோ என்று முதலில் நினைத்தேன். ஆனால், உண்மையில் அவர்கள் திருடர்கள் இல்லை.''

''பின்னே யார் அவ்வளவு துணிச்சலாகக் காரியம் செய்தவர்கள்?''

''திருட்டையும் வழிப்பறியையும் காட்டிலும் பயங்கரமான விஷயம், குழந்தாய்!''

''என்ன, அப்பா!''

''அந்த இரத்தின வியாபாரியை நன்றாய்ப் பார்த்தாயல்லவா?''

''பார்த்தேன்.''

''அவனைப் பார்த்தபோது உனக்கு என்ன தோன்றியது?''

குந்தவி மென்று விழுங்கிக் கொண்டு, ''ஒன்றும் தோன்றவில்லையே!'' என்றாள்.

சக்கரவர்த்தி அவளுடைய மறுமொழியை எதிர்பாராமலே, ''நரபலி கொடுப்பவர்களுக்கு இந்த மாதிரி ராஜலட்சணம் பொருந்தியவன் மிகவும் அருமை!'' என்றார்.

''ஐயோ!'' என்று அலறினாள் குந்தவி. ''அப்பா! நமது நாட்டில் இன்னுமா இந்தப் பயங்கரம்?'' என்று கேட்டாள்.

''ஆமாம், குழந்தாய்! இந்தப் பயங்கர மூட நம்பிக்கையை வேரறுப்பதற்கு முயன்றுதான் வருகிறேன். இன்னும் வெற்றி கிடைக்கவில்லை. ஓரிடத்தில் வேரைக் களைந்தால் இன்னோரிடத்தில் முளைத்து எழும்புகிறது.''

''பாவம்! அந்தச் சாது இரத்தின வியாபாரிக்கு இப்படிப்பட்ட ஆபத்து வந்ததே! நீங்கள் அச்சமயம் அங்கே போயிராவிட்டால் என்ன ஆகியிருக்கும்!''

''அவன் அப்படியொன்றும் சாது இல்லை, குந்தவி! அவனும் ஒரு திருடன்தான்; அதனால்தான் இத்தகைய ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டான்'' என்றார் சக்கரவர்த்தி.

குந்தவிக்கு ஒரு நிமிஷம் மூச்சே நின்றுவிடும் போலிருந்தது.

''நிஜமாகவா அப்பா! அந்த இரத்தினம் எல்லாம் அவன் திருடிக் கொண்டு வந்ததா?'' என்று கேட்டாள்.

''இல்லை, குந்தவி! அவன் இரத்தினம் திருடவில்லை; வேறொரு திருட்டுத்தனம் மாமல்லபுரத்தில் செய்யப்



பார்த்தான்! நமது சிற்பிகள் சிலருக்கு ஆசை காட்டி அவன் வசிக்கும் தீவுக்கு அழைத்துக் கொண்டு போக முயன்றான். இது எப்பேர்ப்பட்ட குற்றம் தெரியுமா, குழந்தாய்! இந்தக் குற்றத்துக்குத் தண்டனை என்ன தெரியுமா?''

''தெரியும் அப்பா!''

''ஆகையினால்தான் தன்னுடைய முயற்சி வெளிப்படாதிருக்கும் பொருட்டு மூட்டை தூக்குவதற்கு ஓர் ஊமைக் குள்ளனை வேலைக்கு அமர்த்திக் கொண்டான். ஆனால் அந்தக் குள்ளன் மேல் எனக்கு ஏற்கெனவே சந்தேகம் இருந்தது, அவன் காபாலிகர்களின் ஆள் என்று.



அது உண்மையாகி விட்டது. குள்ளன் இரத்தின வியாபாரியை ஏமாற்றி உறையூருக்கு வழி காட்டுவதாகச் சொல்லிக் காட்டுப் பாதை வழியாக அழைத்துப் போனான். நான் மட்டும் சரியான சமயத்தில் போய்ச் சேர்ந்திரா விட்டால்...?''

சக்கரவர்த்தி யோசனையில் ஆழ்ந்தார்.

''அப்புறம் என்ன நடந்தது அப்பா! இரத்தின வியாபாரி இப்போது எங்கே?''

சக்கரவர்த்தி பின்னர் நடந்ததையெல்லாம் ஒருவாறு சொல்லி அவனைத் தம்முடைய குதிரை மீதே உறையூருக்கு அனுப்பி வைத்ததையும் தெரிவித்தார்.

குந்தவி சற்றுப் பொறுத்து, ''இரத்தின வியாபாரி தங்களை இன்னாரென்று தெரிந்து கொண்டானா?'' என்று கேட்டாள்.

''அவனுக்குத் தெரியாது. ஏன் கேட்கிறாய்?'' என்றார் சக்கரவர்த்தி.

''ஒன்றுமில்லை; வேஷம் எவ்வளவு தூரம் பலித்தது என்று தெரிந்து கொள்வதற்காகத்தான்.''

பிறகு, குந்தவி, ''அப்பா! ஒரு விஷயம் கேட்க வேண்டும் என்றிருந்தேன்'' என்றாள்.

''என்ன அம்மா?''

''அண்ணா உறையூரே பார்த்ததில்லையல்லவா? நானும் அவனும் உறையூருக்குப் போக எண்ணியிருக்கிறோம்.''

''ஆகா! ஆனந்தமாகப் போய்விட்டு வாருங்கள். உறையூர் என்றதும் ஒரு விஷயம் ஞாபகம் வருகிறது. நேற்று மாமல்லபுரத்தில் மாரப்ப பூபதியைப் பார்த்தேன். அவன் எங்கே வந்தான்? உனக்கு ஏதாவது தெரியுமா?''

''தெரியும். மாரப்ப பூபதியை நானும் அண்ணாவும்தான் வரச்சொல்லியிருந்தோம்.''

''என்னத்திற்காக?'' என்று சக்கரவர்த்தி அதிசயத்துடன் கேட்டார்.

''அச்சுத வர்மர் தமக்குத் தேகம் மெலிந்து விட்டதென்றும், இராஜ்ய காரியங்களைக் கவனிக்க முடியவில்லையென்றும் தெரிவித்தார். அதன் மேல் அண்ணா மாரப்ப பூபதியை வரவழைத்து அவனுக்குச் சோழ நாட்டின் சேனாபதி பதவியைத் திரும்பவும் கொடுத்திருக்கிறான்.''

''ஓகோ!'' என்றார் சக்கரவர்த்தி. மறுபடியும் அவர் யோசனையில் ஆழ்ந்தார். பிறகு அவருடன் பேசுவதில் பயனில்லை என்று, குந்தவி யாழை எடுத்துச் சோகம் பொருந்திய இசையை எழுப்பலானாள்.

(தொடரும்)

---

## நிதி உதவி....

சென்னை அசோக் நகர் ஸ்திரீ சேவா மந்திரில் நடைபெற்ற ஒரு விழாவில் ராதா சில்க் எம்போரியம் ஸ்தாபகர் ஸ்ரீ ஆர்.கே. ராதாகிருஷ்ண செட்டியார், ஸ்திரீ சேவா மந்திரின் கிளை நிறுவனங்களுள் ஒன்றான லாட் லெம்கா ஸ்கூல் ஆஃப் ஆர்ட்ஸ் அண்ட் கிராஃப்ட்ஸுக்கு ரூ. 12,000 நன்கொடையாக வழங்கினார். இந்த நிதி, உடைகள் தயாரிப்பு, எம்ப்ராய்டரி, தையல் வேலை ஆகிய துறைகளில் பயிற்சி பெறும் நான்கு மாணவர்களுக்குக் கல்வி உபகார நிதியாக அளிக்கப்படும்.

மதராஸ் போர்ட் டிரஸ்ட் சேர்மன் ஸ்ரீ டி.வி. வெங்கடராமன் ஐ.ஏ.எஸ். விழாவுக்குத் தலைமை வகித்தார். ஸ்ரீ ஆர். கே. ராதாகிருஷ்ண செட்டியார், அவரது மைந்தர் ஸ்ரீ ஆர். கோதண்டராமன் ஆகியோரின் தாராள உதவியைச் சேவா மந்திரின் உதவித் தலைவி ஸ்ரீமதி ஏ. வி. கிருஷ்ண ராவ் பாராட்டினார்.

## நடன விருந்து....

பம்பாய் ராஜராஜேஸ்வரி பரத நாட்டிய கலா மந்திரின் மாணவி குமாரி லதா நீலகண்டன் ஆர். ஆர். சபா ஹாலில் பிப்ரவரி 18ந் தேதி நடன விருந்தளித்தார். இவரது பாவப் பொலிவும் தாளக்கட்டும் அருமையாக அமைந்திருந்ததைச் சபையோர் பாராட்டினர்.



குட்மார்னிங் டாக்டர்!

# காற்றில் பரவும் கக்குவான் இருமல்



சுமார் மூன்று வயதுள்ள சிறுவனைத் தோளில் கிடத்தியவாறு என் அறைக்குள் நுழைந்த அப்பெண்மணி கூறினாள்: ''எட்டு நாட்களாகக் குழந்தை ரொம்ப இருமுகிறான். கண்கள் ஒரேயடியாகச் சிவந்து விட்டன. கண்களிலிருந்து அடிக்கடி நீர் பெருகுகிறது. சளியும் இருக்கிறது. மூக்கு ஒழுகிய வண்ணம் இருக்கிறது. வீட்டிலிருந்த இருமல் மருந்து களைக் கொடுத்தேன். இருமல் சிறிதும் ஓயவே இல்லை. நேற்று முதல் கஞ்சிகூடக் குடிக்க மாட்டேன் என்கிறான். எதைக் கொடுத்தாலும் வாந்தி எடுக்கிறான்.''

சிறுவனின் கண்களையும் வாயையும் பரி சோதித்து விட்டு ஸ்டெதாஸ்கோப் மூலம் இதயத்துடிப்பு, நுரையீரல் பகுதியையும் பரிசோதனை செய்தேன். உடனே இரத்தப் பரிசோதனை செய்யவும் ஏற்பாடு செய்தேன். இரத்தப் பரிசோதனையின் முடிவு தெரிந்ததும் அவன் அன்னையிடம் ''பையனுக்கு டிரிபிள் ஆன்டிஜென் ஊசி போட்டிருக்கிறதா?'' என்று கேட்டேன்.

''குழந்தை கிராமத்தில் பிறந்தான். இவ்வளவு நாட்களாகக் கிராமத்திலேயே இருந்த தால் அங்கு அந்த ஊசி போட வசதியில்லை'' என்றாள் அப் பெண்மணி.

இரத்தப் பரிசோதனையின் முடிவைப் பார்த்ததில் 'லிம்ஃபோசைட்ஸ்' என்பது சத விகிதத்துக்கு மேல் இருந்தது. சிறுவனுக்கு ஒரு வாக்ஸின் — தடுப்பு ஊசி — போட்டு விட்டு இருமலுக்கும் மருந்து எழுதிக் கொடுத்தேன்.

''சாதாரண இருமல்தானே, டாக்டர்?'' என்று வினவினாள் அன்னை.

''இல்லை, இது 'பெர்ட்டுஸிஸ்' எனப்படும் கக்குவான் இருமல். இப்போதைக்குச் சாதம் போட வேண்டாம். கஞ்சி, பால் போன்ற திரவ உணவு தான் கொடுக்க வேண்டும். தொண்டைப் பகுதி புண்ணாகியிருக்கிறது. சாப்பாடு போட்டால் வாந்தி ஏற்படும். வீட்டில் சின்னக் குழந்தைகள் இருந்தால் அவர்கள் இவன் கிட்டத்தில் வராமல் கவனித்துக் கொள்ள வேண்டும்'' என்று எச்சரித்து அனுப்பினேன்.

''இந்நோய் எப்படி ஏற்படுகிறது? எந்த வயதினரைத் தாக்கும்?''

''பொதுவாக ஏழு வயதுக்கு உட்பட்டவர்களே இந் நோய்க்கு இலக்காகின்றனர். ஆனால் இருபத்தேழு வயதான ஒருவருக்குக்கூட இந் நோய் வந்துள்ளது. இந் நோயுள்ளவர்கள் இருமுகின்றபோது வெளிப்படும் கிருமிகள் அருகிலுள்ள சிறார்களிடம் தொற்றிக் கொள்ளும். காற்றின் மூலம் பரவும் நோய் இது. கிருமிகள் ஒரு சிறுவனின் உடலுக்குள் நுழைந்த பிறகு மூன்று முதல் பதினாறு நாட்களுக்குள் நோயைத் தோற்றுவிக்கும். ஒரு வாரத்துக்குப் பிறகு கடுமையான இருமல் ஏற்படும். அடிவயிற்றிலிருந்து 'கேவிக் கேவி' இருமும். நோய் முற்றி இருமல் அதிகமாகும்போது, கண்களில் இரத்தம் கசியக் கூடும். மார்புப்பகுதியில் 'கர், கர்' என்று ஒருவிதமான சத்தம் ஏற்படும். இருமுகிற போது குழந்தை நாக்கைக் கடித்துக் கொண்டு விடுவதும் உண்டு.''

''இது குணமடைய எவ்வளவு நாட்களாகும்?''

''முற்றும் குணமடைய மூன்று வாரங்களிலிருந்து எட்டு வாரங்கள் வரை பிடிக்கும். உடனடியாகவும் சீராகவும் சிகிச்சை செய்யப்படாவிடின் 'ப்ராங்கோ நியுமோனியா' ஏற்படவும் வாய்ப்பு உண்டு.''

''இந்நோய் ஏற்படாமல் தடுக்க என்ன வழி?''

''குழந்தை பிறந்தவுடன் சில மாதங்களுக்குள்ளாகவே 'டிரிபிள் ஆன்ட்டிஜென்' எனப்படும் தடுப்பு ஊசி மருந்து போட்டு விட வேண்டும். மூன்று வாரங்களுக்கு ஒருதடவை வீதம் மூன்று ஊசிகள் போட வேண்டும்.''

டாக்டர் பி. ஜே. கிருஷ்ணசாமி கூறக் கேட்டு எழுதியவர்: ஆர். பி.



மூன்று வாரங்களுக்கு ஒரு முறை வீதம் மூன்று ஊசிகள்!

# தமிழக விவசாயியின் செயல்திறன்

## புதிய பயிர்முறையில் உற்பத்தி

1976 ல் தென்மேற்கு பருவ மழை தவறியது. வழக்கமாக வளம் சேர்க்கும் நெல்வயல் பகுதி யெல்லாம் நீரின்றி வறண்டது. வரலாறு காணாத வறட்சியால் நம்பிக்கை தளர்ந்தது. சோர்வு பிறந்தது.

ஆனால் நமது விவசாயி சோர்வடையவில்லை. அச்சங் கொள்ளவில்லை. கலப்பையை ஒதுக்கி வைத்துவிட்டு கவலை கொண்டு கலங்கிட வில்லை. இதுவரை கண்டிராத அளவுக்குப் புதியதோர் காரியம் செய்தார்.

காவிரி நதி பாயும் கழனிகளில் சோளக் கதிர்கள் களி நடனம் புரிந்தன. தாமிரபரணிப் பகுதியில் கம்பு விளைந்தது. பெரியாறு பகுதியில் பயிறு வகை பெருகியது!

தஞ்சை மாவட்டத்தின் கல்லணைக் கால்வாய் பாசனப் பகுதியில் தரிசாகப்போகும் நிலையிலிருந்த 2.14 லட்சம் ஏக்கரில் நேரடி நெல்விதைப்பு செய்யப்பட்டது.

2.3 லட்சம் ஏக்கர் புன்செய் நிலத்தில் இருபோக சாகுபடித் திட்டம் மேற்கொள்ளப் பட்டது.

மகத்தான மாற்றம்!
அரியதோர் சாதனை!



# பருவமழை பொய்த்தாலும் தனது முயற்சியில் வெற்றி கண்டு விரைந்து முன்னேறுகிறார் தமிழ்நாட்டு விவசாயி



தமிழ்நாடு அரசின் வேளாண்மைத் துறை வல்லுநர்கள் உழவர்களுக்கு உறுதுணையாக இருந்து, தொழில் நுட்ப உதவிகளையும் காலத்திற்குத் தகுந்த யோசனைகளையும் சகல உதவிகளையும் அளித்தனர்.

- கன்யாகுமரி மாவட்டத்தில் ஒரு பரிசோதனை நிலையம்
- சிறந்த மகசூல் தரக்கூடியதும், ஒட்டு ரகங்களாகவும் உள்ள நெல் வகைகளை 55 லட்சம் ஏக்கரிலும், சிறுதானிய வகைகளை 10.5 லட்சம் ஏக்கரிலும் பயிரிடப்பட்டது.
- வடகிழக்குப் பருவமழைக் காலத்தின் பிற்பகுதியில் பெய்த நல்ல மழையைச் சாதகமாகக்கொண்டு நெல், சிறுதானியங்கள், பயறுவகைகள், வேர்க்கடலை, எள் ஆகிய பயிர்களை 30 லட்சம் ஏக்கர் நிலத்தில் கோடை பயிர்த் திட்டத்தின் மூலம் செயல்படுத்தப்பட்டது.
- பயிர்ப்பெருக்க உத்திகளை மேம்படுத்துவதற்காக சுமார் 30,000 சிறு உழவர்களைக் கொண்டு முதன் முறையாக 1500 வட்டாரப் பயிர்த்தொழில் விளக்கப் பண்ணைகள் நிறுவப்பட்டன.
- மரம் நடும் திட்டத்தின் கீழ் 24 லட்சம் கன்றுகள் நடப்பட்டன.
- வறட்சியால் பாதிக்கப்பட்ட பகுதிகளில், 1000 விதை ஊன்று கருவிகள் தயாரித்து வழங்கப் பட்டன.
- மணல் காற்று வீசி மேடிட்ட 2572 ஏக்கர் நிலம் 45 நாட்களில் பண்படுத்தப்பட்டது.
- 78,515 ஏக்கர் நிலத்தில் மண்வளப்பாதுகாப்புப் பணி நடைபெற்றது.
- 20,000 ஏக்கர் நெல் வயல்களில், பழுப்புநிற வெட்டுக்கிளிகளின் தொல்லை கட்டுப் படுத்தப்பட்டது.
- பயிர் கண்காணிப்பாளர்களாகச் செயல்படுவதற்காக 11250கிராமப்பள்ளி ஆசிரியர்களுக்கு பயிர் பாதுகாப்பு முறைகளில் பயிற்சி அளிக்கப்பட்டது.
- பழநி மலைப் பகுதியில் சுமார் 10,000 ஏக்கரில் வாழைக் குலையில் நோய் பரவாமல் தடுப் பதற்காக முறையாக மருந்து தெளிக்கப்பட்டது.
- பின் தங்கியவர்களுக்கும், பழங்குடி மக்களுக்கும் — குறிப்பாக தோடர் விவசாயிகளுக்கு — மறுவாழ்வுத் திட்டம்.
- நீலகிரியில் விதைப் பாதுகாப்பு நிலையங்கள்.
- தேயிலை, காபித் தோட்டங்களில் மண்பாதுகாப்பு நடவடிக்கைகள்,
- குக்கல்பள்ளத்தாக்கில் ஆரஞ்சு பயிரிடுதல்.

maa DIPR/7072-77-7/120

"மிஸ்டர் முகர்ஜி! உங்கள் வீட்டில் இந்தப் பெண் மூன்று நாட்கள் தங்க அனுமதி கொடுக்க வேண்டும். சென்னையிலிருந்து வந்த இந்தப் பெண் அங்கே இருக்கும் என்னுடைய அதிகாரியின் நெருங்கிய உறவினள் என்று சொல்கிறாள். கையிலிருந்த பணத்தைப் பெட்டியுடன் பறிகொடுத்து விட்டாளாம்" என்றார் ரமேஷ் காங்கூலி.

"எனக்கு ஆட்சேபணையில்லை. ஆனால் அவள் உங்கள் வீட்டில் இருப்பது அவளுக்கு இன்னும் பாந்தமாக இருக்குமே?" என்று கேட்டார் அஜய் முகர்ஜி.

"உண்மைதான். ஆனால் நான் ஒரு வாரம் டில்லிக்குப் போகிறேன். சென்னைக்குத் தந்தி கொடுத்து விட்டுப் போகிறேன். அவளை நீங்கள் மூன்று நாட்களில் ஊருக்கு அனுப்பி விடலாம். என்னுடைய நண்பர் ஒருவரின் உறவினள் என்பதற்காக நான் இந்த உதவியைச் செய்தாக வேண்டியிருக்கிறது. உங்களுக்கு அசௌகரியம் இல்லையானால்—" என்று இழுத்தார் காங்கூலி.

ஒரு நிமிடம் உள்ளே எழுந்து போனார் முகர்ஜி. அவருடைய மனைவி ஆர்த்தியின் கண் ஜாடைதான் அவரை அழைத்தது. "முன் பின் தெரியாதவர்களை இப்படி வீட்டில் அழைத்து வைத்துக் கொள்ளலாமா? இதைப் போல் ஏமாற்றுபவர்களைப் பற்றித் தினமும் நீங்கள் பேப்பரில் படிக்கிறீர்களோ

# அன்பின் தராசு



இல்லையோ? நமக்கு ஏன் இந்த வீண் வம்பு?" என்று முணுமுணுத்தாள் ஆர்த்தி. சந்தேகக் கண்கள் அந்தப் பெண்ணை ஒரு முறை அளந்து நோட்டம் விட்டன. அவளையே உற்று நோக்கிய அந்தப் பெண்ணின் முகத்தில் இளநகை படர்ந்தது.

"என் பெயர் நிர்மலா!" என்று ஆங்கிலத்தில் கூறிக் கையைக் குவித்தாள் அந்தப் பெண். ஆர்த்தியும் பதிலுக்குப் புன்முறுவலுடன் கையைக் குவிக்க வேண்டியதாயிற்று.

"ஆகட்டும் மிஸ்டர் காங்கூலி! நான் பார்த்துக் கொள்கிறேன். கவலைப்பட வேண்டாம்" என்று அவரை அந்த இடைஞ்சலான சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு வழி அனுப்பினார் முகர்ஜி.

"நீங்கள் எப்பொழுதும் ஓர் இரண்டுங் கெட்டான். வழியில் போகிற தொல்லையை விலைக்கு வாங்குவதே உங்களுக்கு வழக்கமாகி விட்டது!" என்று வங்காளியில் பொரிந்து கொண்டே உள்ளே போனாள் ஆர்த்தி. தன் கையிலிருந்த சிறு பையை உள்ளே கொண்டு போய் வைத்து விட்டு நிர்மலாவும் அவள் பின்னே போனாள்.

சமையல் தயாராகிக் கொண்டிருந்தது. மிளகாயும் எலுமிச்சம் பழமுமாகக் கொதி வந்து மணத்துக் கொண்டிருந்தது. எதையோ

அம்மியில் வைத்து இழைக்கத் தொடங்கி னாள் ஆர்த்தி. நிர்மலாவுக்கு நாவில் தவி ருசி பொங்கிற்று. ''நான் உதவி செய் கிறேனே'' என்று சொல்லி விட்டு முந்தானை யைச் செருகிக்கொண்டு குழவியை வாங்கித் தானே அரைக்கத் தொடங்கினாள்.

''சாதாரணச் சமையல்தான். மாதக் கடைசி அல்லவா?'' என்று அவளை ஒரு இணுசாகப் பார்த்தாள் ஆர்த்தி. பொறுக்கி இரண்டொரு காய்களை மட்டும் நறுக்க எடுத்தாள். நிர்மலா அம்மியின் காரியத்தை முடித்து விட்டு அவசரமாய் அவற்றை வாங்கிக் கழுவிப் பொடிப் பொடியாய் நறுக்க ஆரம்பித்தாள். வாணலியில் கடுகு எண்ணெய் பொரிந்தது.

''நீங்கள் தெற்கத்தியர். இந்த வாசனை பிடிக்குமோ?'' என்று கேட்டாள் ஆர்த்தி. அந்த வாசனைக்கு மருண்டாவது ஓடிப்போய் விடமாட்டாளா என்று ஒரு சபலம். கத்தியைக் கீழே வைத்துவிட்டு ஏற இறங்க அவளை ஒரு முறை மலர விழித்துப் பார்த்தாள் நிர்மலா. ''நான்கு விதமாகவும் ருசிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். ஒரே மாதிரி சமையலைச் சாப்பிட்டு எனக்கு அலுத்துப் போய்விட்டது'' என்றாள். ஆர்த்திக்குக் கொஞ்சம் ஏமாற்றம்தான்.

வேலைக்கு உதவியாக இருந்து விட்டுக் குளிக்கப் போனாள் நிர்மலா. அவள் உள்ளே இருக்கும்போது முகர்ஜியும் அவருடைய மனைவியும் பேசுவது மூச்சுக் காற்றாய் மெல்லக் கேட்டது.

''நல்ல பெண்ணாகத்தானே இருக்கிறாள்? எவ்வளவு ஆசையாக உன்னுடன் ஒட்டிக் கொண்டு பழகுகிறாள்? இரண்டொரு நாட் களுக்கு அவளைச் சந்தோஷமாகத்தான் வைத்துக் கொண்டு அனுப்பி வையேன்'' என்றார் முகர்ஜி.

நிர்மலாவுக்கு 'ஜில்'லென்று மேலெல்லாம் பொழிந்தது.

''என்னவோ? நானெக்குப் புடவையைக் காணோம், பாத்திரத்தைக் காணோம் என்று ஏற்படாம விட்டால் சரி. உங்கள் நண்பர் அப்போது உதவிக்கு வரமாட்டார்'' என்றாள் ஆர்த்தி.

நிர்மலாவுக்கு அடுப்புப் புகை கண்ணில் உறுத்தி எரிச்சலைக் கிளப்பிற்று.

''இருந்து விட்டுப் போகட்டும். சாதாரணமாக நடத்தினால் போதும். விருந்தாளி என்று ஸ்பெஷலாக எதுவும் வேண்டாம். அவள் நம்மை ரொம்பச் சராசரி என்று நினைத்துக் கொண்டாலும் பரவாயில்லை'' என்றார் முகர்ஜி.

நிர்மலாவின் மனத்தில் ஒரு தனியான கிளுகிளுப்பு வளர்ந்தது.

''ஆமாமாம், பின்னே சினிமா, ஷாப்பிங், பிக்னிக் என்று ஸ்பெஷல் உபசாரம் வேறேயா என்ன?'' என்று முணு முணுத்தாள் ஆர்த்தி.

''இவர்களே என்னென்னமோ பேசிக் கொள்கிறார்களே? என்னைப் பற்றித் தெரிந்து விடுமோ?'' என்று நினைத்துக் கொண்டாள் நிர்மலா.

''கூடியவரைக்கும் வங்காளியிலேயே பேசு. நம்முடைய சங்கடத்தை அவள் புரிந்து கொள்கிற மாதிரி பேசினால் நன்றாயிராது'' என்றார் முகர்ஜி.

தனக்கே புரிந்த தன் இரகசியத்தில் வாயைப் பொத்திக் கொண்டு நிர்மலா சிரித்துக் கொண்டாள்.

## லட்சுமி சுப்ரமணியம்



குளித்துவிட்டு அவள் வெளியே வந்த போது ஆர்த்தி பூஜை அறையில் இருந்தாள்.

''இரண்டு நூல் புடவை இருந்தால் கொடுக்கிறீர்களா? போகும்போது பத்திரமாகக் கொடுத்து விட்டுப் போகிறேன்'' என்றாள் நிர்மலா. அப்படிக் கேட்க நேர்ந்த சங்கடத்தின் பாவனையாக அவள் நெற்றி சுருங்கிற்று. கண்கள் திரி இழுத்தாற்போல் ஒளி மங்கின.

ஆர்த்தி ஒருமுறை கைகளைப் பிசைந்து கொண்டாள். பிறகு யோசனையாக உள்ளே போய், இரண்டு பழைய நூல் புடவைகளைக் கொண்டுவந்து போட்டாள். ''பெட்டியில் எல்லாமே போய் விட்டதா? எப்படி அவ்வளவு அஜாக்கிரதையாக இருந்தாய்?'' என்று கேட்டாள். கசப்பு மருந்து தெரியாமல் தேனை விடுகிற மாதிரி தன் சினத்தைக் குரலின் மென்மையில் மறைத்துக் கொண்



''ஆடிட்டர் சார்! பேலன்ஸ் ஷீட் ரெடி!''

டான். 'இன்னும் என்னவெல்லாம் கேட்கப் போகிருயோ?' என்பதுபோல் ஒரு பார்வையுடன் உள்ளே போய் விட்டாள்.

அந்த நூல் புடவையை அருமையுடன் ஆசையாகத் தொட்டுத் தடவி அனுபவித்துக் கட்டிக் கொண்டாள் நிர்மலா. பூஜை அறையில் கோலம் போட்ட போதும், பூத் தொடுத்த போதும், சுலோகம் படிக்கக் கேட்டபோதும் அவள் முகத்தில் மகிழ்ச்சி ததும்பிற்று. அபூர்வமான திருப்தி நெஞ்சில் நிறைந்து பார்வையில் நிழல் காட்டிற்று.

பிற்பகல் நான்கு மணிக்கு வெளியே கிளம் பினர்கள். திரும்பி வரும்போது 'லேக் மார்க்கெட்'டில் கறிகாய் வாங்க நுழைந் தாள் ஆர்த்தி. ஒரு தனி உற்சாகத்துடன் நிர்மலா ஒவ்வொன்றையும் தேடிப் பொறுக்கி வாங்கினுள். பேரம் செய்யும்போது அதைச் சந்தோஷமாகக் கூர்ந்து கவனித்தாள். ஆர்த்தி கறிகாய்க் கூடையின் கனமயை அவள் கையில் ஏற்றி விட்டாள்.

அதைக் கவனித்த முகர்ஜியின் நெஞ்சில் அனுதாபம் சுரந்தது. 'பளபளவென்று உன்னதமான பாதங்கள் நடக்கும்போது கவ னித்தாலே தெரிகிறது. இவள் பெரிய இடத்துப் பெண் என்று. ஆர்த்தி இவளை இன்னும் சற்றுக் கண்ணியமாக நடத்தக் கூடாதோ?' என்று மனத்துக்குள்ளேயே பொருமினுர்.

ஒரு தோளில் பையும் மற்றொரு கையில் கூடையுமாக நடந்தாள் நிர்மலா. அவருக்கே கொஞ்சம் பாவமாகத்தான் இருந்தது. ''நானும் கொண்டு வருகிறேனே?'' என்று கூடையை வாங்கிக் கொண்டார்.

''என்ன இருந்தாலும் நீங்கள் ரொம்ப 'லாஃப்ட்'! அதுதான் வழியில் போகிற வன் எல்லாம் தலையில் வைத்து அரைத்து விட்டுப் போகிருங்கள்'' என்று கீழுதட்டைப் பிதுக்கிக் கொண்டாள் ஆர்த்தி. நிர்மலா வுக்குச் சிரிப்பு 'கிறுக்'கென்று வெடித்து வந்தது.

''நீ ஏன் சிரிக்கிருய்?''

''நீங்கள் அவரை ஏதோ கலாட்டா செய் வது மட்டும் புரிந்தது'' என்ருள் கண்களைச் சிமிட்டிக் கொண்டு.

''சரி, சரி. வேலையைப் பார்க்கலாம்'' என்று முன்னே நடந்தாள் ஆர்த்தி. வழியில் வறுத்த நிலக்கடலை வண்டி ஒன்று நகர்ந்து வந்து கொண்டிருந்தது. நிர்மலாவின் பார்வை ஆவலோடு அந்தப் பக்கம் திரும் பிற்று. கால்கள் மேலே நடக்க மறுத்தன. மனைவி தடை சொல்லுவதற்கு முன் அவ சரமாய் முப்பது பைசாவுக்கு நிலக்கடலை வாங்கினுர் முகர்ஜி.

வீட்டுக்கு வந்ததும், காலை நீட்டி உட் கார்ந்தபடி தோலோடு வறுத்த வேர்க்கட லையை 'ணக்கு ணக்கு' என்று நெற்றிக் கொண்டு தனியாக ஓர் ஆசையோடு சாப் பிடத் தொடங்கிய நிர்மலாவை விநோத மான பார்வையுடன் கவனித்துக் கொண்டு உள்ளே போனுள் ஆர்த்தி.

மறுநாள் விடுமுறை. அவர்கள் ஏதாவது ஒரு சினிமாவுக்குப் போவது வழக்கம். ''இந் தப் பெண்ணையும் அழைத்துக் கொண்டு நாம் எங்கே போவது?'' என்று சிணுங்கினுள் ஆர்த்தி.

''அதனுல் என்ன? வந்து விட்டுப் போகட் டுமே? உத்தம்குமார் நடித்த வங்காளிப் படங்கள் மெட்ராஸுக்கு வருமோ என் னமோ? இங்கேதான் பார்த்து விட்டுப் போகட்டுமே?'' என்ருர் முகர்ஜி.

''சினிமாவை 'டீஸண்டாக' உட்கார்ந்து பார்க்க வேண்டுமே? அங்கே வந்து கடலையை யும் பொரியையும் கொறித்தால் எனக்குப் பிடிக்காது'' என்ருள் ஆர்த்தி.

இருவரையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு, ''சினிமாவுக்குப் போக வேண்டும் என்று எனக்கு ஆசையில்லை. நீங்கள் போய்விட்டு வாருங்களேன்'' என்ருள் நிர்மலா, அவர் களுடைய உரையாடலை ஓரளவு ஊகித் தவள் போல.

''இல்லை, இல்லை! நீயும் வா!'' என்று ஆர்த்தி சமாளித்துக் கொண்டாள். முன்னே பின்னே தெரியாத பெண்ணைத் தனியாக வீட்டில் காவலுக்கு வைத்து விட்டுப் போக அவளுக்குப் பயம்.

படத்தைப் பார்த்து விட்டு டிராம் வண்டி யில் வந்தார்கள். நெரிசலான கூட்டத்தில் அப்படி இடித்துக் கொண்டு நின்றபடியே பிரயாணம் செய்தது நிர்மலாவுக்கு மகிழ்ச்சி யாக இருந்தது. கண்ணையும் நெஞ்சையும் ஜில்லென்று தொட்டுக் குளிர வைக்கும் மரங்களின் நிழல் வழியாக அது வளைந்து வளைந்து ஓடியபோது அவள் முகத்தில் ஒரு குழந்தைக் குதூகலம்தான் தாண்டவ மாடிற்று. அதைக் கண்டு வியந்து போனுர் முகர்ஜி.

உட்கார்ந்து கொண்டிருந்த ஒரு வாலிபன் எழுந்து நின்று அவளுக்கு இடம் கொடுத் தான். அந்த இடத்தில் உட்கார்ந்துகொண்டு நின்று கொண்டிருந்த ஒருவரின் கையிலிருந்த குழந்தையை வாங்கி மடியில்வைத்துக் கொண் டாள் நிர்மலா. வெளியே நடைபாதை யிலும் கட்டிடங்களிலும் தெரிந்த காட்சிகளைக் குழந்தைக்கு வேடிக்கையாகக் காட்டிக் கொண்டே வந்தாள். கண்ணில் இதயம் தெரிய அதைப் பார்த்தார் முகர்ஜி. அந்தக் குழந்தையின் பார்வைக்கும் அவளுடைய பார்வைக்கும் வித்தியாசமே தெரியவில்லை அவருக்கு.

மறுநாள் நிர்மலா ஊருக்குக் கிளம்பிவிட் டாள். முகர்ஜி அவளை ரயிலேற்றிவிட்டு

# ஹேலோ ஷாம்பூகள்–உங்கள் கேசத்தின் பராமரிப்பிற்கெனவே...

## உங்கள் கேசம் மிருதுவாகவும், பட்டுப் போன்றும் திகழவே, உபயோகிப்பீர் ஹேலோ காஸ்மெடிக் ஷாம்பூ

உங்கள் கேசம் இன்று போல் என்றும் அழகுடன் விளங்க உபயோகியுங்கள் ஹேலோ காஸ்மெடிக் ஷாம்பூ. இதன் விசேஷமான, சீரான, சிறந்த உத்தியினால், உங்கள் கேசத்திற்கு இயற்கையிலேயே அமைந்துள்ள பட்டுப்போன்ற தன்மை மீண்டும் கிடைத்துக் கொண்டே இருக்கிறது.






**இயற்கை ஆரோக்கியத்துடன் கூடிய கேசத்திற்கு —ஹேலோ கேசப் பராமரிப்பு!**

**ஹேலோ எக் ஷாம்பூ:** விசேஷ போஷாக்கு மிக்க இந்த ஷாம்பூவில் உள்ள வளமிக்க முட்டைப் புரதத்தின் பயனுக, உங்கள் கேசம் கட்டுக் கோப்புடன் கவர்ச்சியாகத் திகழ்கிறது.

**ஹேலோ லெமன்-ஃப்ரெஷ் ஷாம்பூ:** உங்கள் கேசத்திற்கு இயற்கையான, தூய்மையான பளபளப்பைத் தருகிறது.

**ஹேலோ கான்ஸென்ட்ரேட் ஷாம்பூ:** [illegible] நுரைவளத்தின் மூலம் உங்கள் கேசத்தை மென்மையாகவும், கட்டுக்கடங்கியும் வைத்திருக்க சிறிதளவே போதும்.




**ஹேலோ ஷாம்பூகள் மட்டுமே சீரான, சிறந்த உத்தியின்படி தயாரிக்கப் படுகின்றன.**

HSR.G.4 TM

## ஸ்பென்ஸர்ஸ் டீ-
## சிக்கனத்தின் சின்னம்!
## 250 கிராம் பாக்கெட்
## 125 கோப்பை தேநீர்
## தருகிறது









ST 2536A TAM

உங்கள் வீட்டுக்கு எமது பிரதிநிதி விஜயம் செய்து, ஒரு ரூபாய் தள்ளுபடி அளிக்கும் கூப்பனை வழங்குவார். உயர்ந்த தேநீரைக் குறைந்த விலையில் பெற்றுச் சுவைக்க இது ஓர் அரிய வாய்ப்பு!

சுவையும் நறுமணமும் மிக்க தேநீர் தயாரிக்க, 2 கிராம் ஸ்பென்ஸர்ஸ் டீ இருந்தால் போதும். புதுச் சுவை, மறக்க முடியாத நறுமணம்... நீலகிரிச் சிகரங்களில் விளையும் உயர்தர தேயிலை யைத் தேர்ந்தெடுத்து ஸ்பென்ஸர்ஸ் வழங்குகிறார்கள். உங்கள் சுவைக்குத் தக்கபடி கிரீன் லேபல் அல்லது ரெட் பாண்ட் டீ அருந்தி இன்புறுங்கள்.

**இது ஸ்பென்ஸர்ஸ் தயாரிப்பு.**
**எனவே, சிறப்பானது.**

**ஸ்பென்ஸர் & கோ. லிமிடெட்**
சென்னை மற்றும் கிளைகள்

---

## கண்ணாடியின்றி கூர்மையான பார்வை பெறலாம்!

உங்களுக்கு இதைவிட மட்டற்ற மகிழ்ச்சி தரக்கூடிய ஒரு செய்தியும் வேறு உண்டோ!

**'காண்டாக்ட் லென்ஸ்'களை உபயோகியுங்கள்.**

இந்த காண்டாக்ட் லென்ஸ்'கள் கிட்டப்பார்வை, தூரப்பார்வை மற்றும் அட்பாகிக் (காடராக்ட் ஆப்ரேஷனுக்குப்பின்) கெரடோ கோனஸ், அனிஸோமெட்ரோபியா, அனிரிடோனியா, பாலியோபியா, போன்ற பார்வை குறைபாடு உடையவர்களுக்கு மிகவும் சிறந்தது.

'காண்டாக்ட் லென்ஸ்'களை வெகுசுலபமாக நீங்களே உங்கள் கருவிழிகளில் பொருத்திக்கொள்ளலாம்... கழற்றியும் விடலாம்—சில நாட்கள் பழகிய பின்! உங்கள் விழிகளில் பொருத்தப்பட்ட இச்சிறு 'காண்டாக்ட் லென்ஸ்'கள் மற்றவர்கண்களுக்கு தெரியாது. ஆகவே உங்கள் எழில் மிகு முகத் தோற்றத்தில் எவ்வித மாறுதலும் இல்லை!



**உங்கள் கண் வைத்தியரை ஆலோசனைக்கு அணுகுங்கள்**

மற்ற விபரங்களுக்கு

**ஆசியா காண்டாக்ட் லென்ஸ் லாபரெட்டரி**
4/1., ஆண்டர்ஸன் ரோடு,
சென்னை-600 006. போன்: **87865**

வந்தார். அவரைக் கண்டதும் ஒரு பெரு மூச்சு விட்டாள் ஆர்த்தி. ''அப்பாடி! ஒரு வழியாக அனுப்பியாயிற்று. நம்மை ஏமாற்றிவிட்டு எதையாவது தட்டிக்கொண்டு போய்விடாமல் இருக்க வேண்டுமே என்று எனக்கு ஒரே கவலை'' என்றாள். முகர்ஜி பதில் சொல்லவில்லை. அவருடைய கண்களில் கருணை சிந்திற்று.

''என்ன, நீங்கள் பேசவே யில்லை? அந்தப் பெண்ணிடம் ஏனோ உங்களுக்கு ஒரு மன இளக்கம். அது எனக்குப் புரியவே இல்லை'' என்று முகம் கடுக்கச் சொன்னாள் ஆர்த்தி.

''அவளைப் பார்த்தால் எனக்கு அப்படி யெல்லாம் தோன்றவில்லை ஆர்த்தி! வசதியாக வாழும் ஒரு நல்ல பெண்ணாகத்தான் படுகிறது. நம்முடைய எளிய வாழ்க்கையையும், சிறு வசதிகளையும் கூட அவள் எவ்வளவு ஆனந்தமாக அனுபவித்தாள், கவனித்தாயா? நம்முடைய இத்தனை வருஷ வாழ்க்கையில் குழந்தை கூட இல்லாத வெறுமையில், நம்மிடம் இத்தனை ஒட்டுதலாகப் பழகியிருந்து விட்ட உறவினர்கள் எத்தனை பேர்? என்னவோ இன்றைக்கு அந்தப் பெண்ணை வழி அனுப்பிவிட்டு வந்தபோது எனக்குக் கொஞ்சம் வேதனையாகக் கூட இருந்தது'' என்று குரல் தழுதழுக்கச் சொன்னார் முகர்ஜி.

''எப்படிப் போனாள், அந்தப் பெண்?''

''ரிசர்வ் செய்யாத இரண்டாவது வகுப்பில்தான். அவளுக்கு அதில்கூடச் சந்தோஷம்தான். எனக்குத்தான் என்னவோ போல் இருந்தது. அவளிடம் டிக்கட்டுக்குப் பணம் இல்லை. நான்தான் வாங்கிக் கொடுத்தேன்.''

''ஐம்பது ரூபாய் நஷ்டம். இதைத்தான் நான் சொன்னேன்'' என்று சீறினாள் ஆர்த்தி.

அன்று அலுவலகத்துக்கு அவர் கிளம்பிக் கொண்டிருந்தபோது, அந்த ரிஜிஸ்தர் தபால் வந்து சேர்ந்தது. சென்னையிலிருந்து வந்த, கையெழுத்து அடையாளம் தெரியாத அந்தக் கவரை முன்னும் பின்னுமாய்த் திருப்பிப் பார்த்துவிட்டுப் பிரித்தார் முகர்ஜி. உள்ளிருந்து ஒரு கடிதம் விழுந்தது. கூடவே குண்டூசியில் செருகியிருந்த 'டிராஃப்ட்'. அதைப் பிரித்து ஆர்த்தியிடம் கொடுத்துவிட்டுக் கடிதத்தைப் படிக்கத் தொடங்கினார் முகர்ஜி.

''ஐயா, முன்பின் அறிமுகம் இல்லாத ஒருவரிடமிருந்து ஒரு கடிதமும் ஆயிரம் ரூபாய் பணமும் வருவது உங்களுக்கு வியப்பாக இருக்கலாம். என் பெயரைப் படித்தாலும் உங்களுக்குப் புரியாது. அந்தப் பெயரில் நான் உங்களுக்கு அறிமுகமாகவில்லை.

தில்லிக்கு உலகத் திரைப்பட விழாவுக்குப் போனபோது எனக்கு இப்படி ஒரு வேடிக்கையான 'யோசனை' தோன்றிற்று. ஒரு சராசரிக் குடும்பப் பெண்ணாக, ஓர் எளிய குடும்பத்தில் மூன்று நாட்கள் நிம்மதியாக மனம் போன போக்கில் பொழுதைக் கழிக்க விரும்பினேன். ஒரு நண்பர் இந்த ஏற்பாட்டைச் செய்து கொடுத்தார். காங்கூலியும் உதவினார்.

ஒரு 'பிஸி'யான சினிமா நட்சத்திரமாக இருக்கும் என் வாழ்க்கையில் என்னுடைய ஆசைகள், நேரம், பொழுதுபோக்கு என்று எதுவுமே இல்லை. ஸ்டூடியோவில் நடிப்பது போலவேதான் வீட்டிலும் நடிக்க வேண்டியிருக்கிறது. ஆனால் உங்களுடன் இருந்த மூன்று நாட்களில் அந்த முகமூடியைக் கழற்றி விட்டு நிம்மதியாகப் பொழுதைக் கழித்தேன்.

திரைப் படக் காட்சிக்காக மட்டுமே சமையல் செய்தும், காரியங்கள் செய்தும் இது வரை பழகிய நான், உங்கள் வீட்டில் உண்மையாகவே வேலை செய்தபோது எனக்கு எவ்வளவு ஆனந்தமாக இருந்தது தெரியுமா? ஓ! அந்த டிராம் பிரயாணம்—மடியில் குழந்தையை வைத்துக் கொண்டு வேடிக்கை காட்டியது — அதை எவ்வளவு ரசித்தேன்!

என் பொழுதுகளுக்குப் பாதிக்கு மேல் பிறருக்குத்தான் சொந்தம். கூட்டத்துக்கு நடுவே மனத்தளவில் தனித்தே இருந்து, ஒரு வெறுமையில் ஏங்கிக் கொண்டிருந்த எனக்கு இந்த மூன்று நாள் அனுபவம் ஒரு விடுதலை. அதை ஒவ்வொரு கணமும் அனுபவித்து மகிழ்ந்தேன். நான் உங்களுக்கு ஓர் அபூர்வ விருந்தாளியாகத்தான் அறிமுகப்படுத்தப்பட்டேன். ஆனால் உங்களைப் போன்ற ஒரு 'ஹோஸ்ட்' கிடைப்பதும் அபூர்வம். ஒரு ரகசியம் — எனக்குச் சுமாராக வங்காளி மொழி தெரியும்!

அந்த அன்புக்கு மதிப்புப் போட முடியாது. என்னுடைய எளிய அன்பளிப்பாக இந்தச் சிறு தொகையை மதனியிடம் கொடுங்கள். என்னால் வேறு என்ன செய்ய முடியும்?

அன்புள்ள ஜெயராதா

அவர் படித்ததைக் கேட்டுக் கொண்டிருந்த ஆர்த்தியின் முகத்தில் செதுக்கியிருந்த பகையின் வார்ப்பு, மெல்ல மெல்ல - இளகி மாறிற்று.

''பார்த்தாயா ஆர்த்தி? நம்முடைய அன்பின் தராசு எவ்வளவு நம்பத் தகுதியற்றதாக இருக்கிறது? சிலந்தி இழைப் பிசகில் அந்த அன்பு பகையாய்த் திரியக் காத்திருப்பதை நினைத்தால் சிரிப்புத்தான் வருகிறது!'' என்று அலுவலகத்துக்குப் புறப்பட்டார் முகர்ஜி. ஆர்த்தி கண்களில் துளிர்த்த நீரைத் துடைத்துக் கொண்டே டிராஃப்டைத் திருப்பி அனுப்பத் தயாரானாள்.

**1: 2: 1: 2: 1:**

1: ஏன் சார்! தேன் Liquid-ஆ அல்லது Solid-ஆ?
2: தெரியாது....
1: தேன் நிச்சயம் Liquidதான்.
2: எப்படிச் சொல்றேள்?
1: ஆமாம்.... தேன் கொட்டிடுமே!

1: மிருகங்களிலேயே religious மிருகம் எது?
2: தெரியாது.... என்னது?
1: யானை.
2: ஏன்?
1: யானைக்குத்தானே 'மதம்' பிடிக்கும்!

வெங்கட்டின் 'மெழுகு பொம்மைகள்' நாடகத்தில் கேட்டுச் சிரித்தவர் ஆர். சுவாமிநாதன்



3

தமிழாக்கம்
ரா. வீழிநாதன்

விமல் மித்ர

## 2. திடீர்ச் சாமியார்

இதுவரை கூறியதெல்லாம் மிகப் பழைய கதை. இன்று எத்தனையோ நாட்களுக்குப் பின், தேநீர் விடுதியில் நிசிகாந்தனுடன் அமர்ந்து வைத்த கண் வாங்காமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்தேன். பார்த்துக்கொண்டிருந்ததோடு மட்டுமல்ல, அவனைப் பற்றியே யோசித்துக் கொண்டும் இருந்தேன். நிசிகாந்தன் பெரும் குடியன். இன்று அவன் முகத்தில் பெரிய மாறுதலைக் கண்டேன். அன்று நிசிகாந்தனுடன் நான் நடந்து கொண்ட முறையை இன்று நினைக்கும்போது மிகவும் வருத்தமாய் இருந்தது.

ஆனால் நிசிகாந்தனுடைய பார்வை எதிலுமே லயிக்கவில்லை. அவன் சிற்றுண்டி அருந்துவதிலேயே கருத்தாயிருந்தான். — சாப், கட்லெட், ஆம்லெட், கேக்! அவன் சிற்றுண்டி அருந்துவதில் காட்டிய ஆர்வத்தைக் கண்டபொழுது, வெகு நாட்களாகவே அவன் வாய்க்கு வழங்கும்படியாக எதுவுமே சாப்பிட்டிருக்க மாட்டான் என்று தோன்றியது.

''இன்னொரு கட்லெட் சாப்பிடுகிறாயா, நிசிகாந்த்?'' என்று நான் ஆதரவோடு அவனைக் கேட்டேன்.

''வாங்கித் தந்தால் சாப்பிடுகிறேன்!''— உணர்ச்சியற்ற குரலில் ஆர்வமோ, ஆவலோ காட்டாமல் கூறினான் அவன்.

''சூடாகச் சிக்கன் கட்லெட் ஒன்று கொண்டுவா!'' என்று சர்வரைக் கூப்பிட்டு ஆர்டர் கொடுத்தேன்.

சர்வர் சென்ற பின் நிசிகாந்தன் கட்லெட்டைச் சுவைத்தவாறே, ''சுத்தமான நெய்யில் தயாரித்த கட்லெட். இந்தச் சிற்றுண்டி சாலையில் நான் முன்பும் எத்தனையோ தடவை சாப்பிட்டிருக்கிறேன்!'' என்றான். பிறகு என்னைப் பார்த்து, ''நீங்களும் ஒரு கட்லெட் சாப்பிடுங்களேன், நன்றாயிருக்கிறது!'' என்றான்.

''வேண்டாம். நான் இப்பொழுதுதான் வீட்டில் சிற்றுண்டி அருந்திவிட்டு வந்திருக்கிறேன். நீ சாப்பிடு'' என்றேன்.

சர்வர் கட்லெட் கொண்டு வந்து வைத்தான், சூடாக. ஆவி பறந்து கொண்டிருந்தது. நிசிகாந்தன் நாக்கில் நீர் ஊற அதைச் சுவைத்துச் சாப்பிடலானான்.

அவன் திருப்தியாகச் சாப்பிட வேண்டும், போதும் போதுமென்ற அளவுக்குச் சாப்பிட வேண்டும் என்று நான் விரும்பினேன். பாவம், வாழ்க்கையில்தான் அவன் எத்தனை கஷ்டங்களை அனுபவித்து விட்டான்! இப்பொழுதாவது அவன் இஷ்டத்துக்குச் சாப்பிடட்டுமே!

நிசிகாந்தன் சாப்பிட்டுக் கொண்டிருந்தான்; நான் யோசித்துக் கொண்டிருந்தேன். அந்தக் காலத்து விஷயங்களை நினைத்துப் பார்த்த பொழுது, எனக்கு அதற்கு முந்திய பழைய விஷயங்கள் தாமாகவே நினைவுக்கு வந்தன.

மோகாமா காட் ரெயில் நிலையத்தில் கஞ்சாவுடன் பிடிபட்ட சூட் கேஸ்; அதையொட்டி சில நாட்களுக்குப் பிறகு நடந்த இன்னொரு விந்தை நிகழ்ச்சி! அதற்குப் பின் என் வாழ்க்கை முறையிலேயே ஏற்பட்ட மாறுதல்! —எல்லாமே நினைவுக்கு வந்தன.

அந்த நாட்களில்தான் நான் ஒரு புத்தகம் எழுதினேன். அதற்குக் கிடைத்த பாராட்டில், என் புகழ் ஓங்கி விட்டது. அந்தப் புத்தகத்துக்குப் புகழுரை மட்டும் என்ன, இகழுரையுமே ஏராளமாகக் கிடைத்தது. ஆனால் அப்படி வரிந்து கட்டிக் கொண்டு தாக்கி விமரிசனம் செய்தவர்கள் என் புத்தகத்தின் பக்கங்

களையே கூடப் புரட்டிப் பாராதவர்கள். புத்தகத்துக்குள்ளே நான் என்ன உளறிகொட்டிக் கிளறி மூடியிருக்கிறேன் என்பதை அவர்கள் பார்க்கவே முற்படவில்லை. இலக்கிய உலகில் இப்படி ஒருவன் இடுதிப்பென்று எங்கே வந்து குதித்தான் என்று மட்டும் எண்ணிப் பார்த்திருக்கிறார்கள். தங்கள் சொத்தில் பங்கு போட்டுக் கொள்ள முனைந்து விட்ட தாயாதியாக என்னை அவர்கள் நினைத்து விட்டதே காரணம்! பாவம், அவரவர் கவலை அவரவருக்கு! அதற்காக நான் உணர்ச்சி வசப்படவில்லை. உணர்ச்சி வசப்பட்டாலும் நான் என்ன செய்ய முடியும்? அவர்கள் விமரிசனத்தினால் நான் கலங்கிப் போய்ப் பேனாப் பிடிப்பதில்லை என்று முடிவுக்கு வர வேண்டும் என்று அவர்கள் எதிர்பார்த்தார்கள். அவர்கள் கருத்தை நான் புரிந்து கொண்டு விட்டேன். அவர்கள் முயற்சியைத் தலையெடுக்க விட்டு, அவர்களை என் தலையில் ஏற்றி உட்கார வைத்துக் கொள்ள விரும்பாததால், நான் என் உணர்ச்சிகளை வெளிக் காட்டாமல் கட்டுப் படுத்திக் கொண்டேன். அவர்களுடைய முயற்சியை முளையிலேயே கிள்ளி எறிய வேண்டி நான் செய்த காரியம் என்ன, தெரியுமா? நண்பர்கள் — பகைவர்கள் எல்லோரிடமிருந்தும் தூர விலகி நின்று முனைப்போடு எழுத முயன்று அதிலேயே மூழ்கிப் போனதுதான். அதற்காகப் போலீஸ் வேலையை விட்டு விட்டேன். வேலையை மட்டுமா விட்டேன்? சந்தடி மிகுந்த கல்கத்தா நகரத்தையுமே ஒதுக்கி விட்டு, அதன் கிளையாக வளர்ந்திருந்த அமைதியான குடியிருப்பு ஒன்றில் வாடகைக்கு ஒரு ஃபிளாட் எடுத்துக் கொண்டு அங்கு குடி ஏறிவிட்டேன். நகரத்தைத் துறந்து, இகழுரை - புகழுரையை மறந்து தனிமையான இவ்விடத்தில் அமர்ந்து ஒரு பெரிய நாவல் எழுதத் திட்டமிட்டு, அதில் முழுமூச்சாக முனைந்தேன்.

நான் குடியிருந்த வீட்டுக்கு அருகிலேயே கங்கை ஆறு ஓடிக் கொண்டிருந்தது. அதிக அகலம் இல்லை. இரு கரைகளிலும் நிறைய மரங்கள் இருந்தன.

பகல் முழுவதும் வேலை செய்வேன். மாலை நேரங்களில் கங்கைக் கரையோடு வெகு தூரத்துக்கு வெகு தூரம் சென்று காலாற உலாவி வருவேன்.

பகல் முழுவதும் எழுதி எழுதியே களைத்துப் போவதனால், மாலை வேளைகளில் வீட்டில் இருப்புக் கொள்வதில்லை. அந்த நேரத்தைக் களைப்பாற்றிக் கொள்ளும் நேரமாக்கிக் கொண்டேன். நான் களைப்பாறுவது என்றால், நடைபாதையில் காலாற உலாவப் போவதுதான். நேரே பேருந்துகள் செல்லும் நாற் சந்தி வரை நடப்பேன். இங்கே



கொஞ்சம் கூட்டம் இருக்கும்; கலகலப்பு தாண்டவமாடும். சில கடை - கன்னிகளும் இருந்தன. நடை பாதையில் காய்கறிக் கடைகள், முடிதிருத்தகம், மிட்டாய்க் கடைகள், தேநீர் விடுதிகள், வெற்றிலை - பாக்கு, பீடி - சிகரெட் கடைகள் என்று!

விவித பாரதி வழங்கும் தமிழ்த் திரைப்படப் பாடல்கள் இங்கே செவிப்பறையைத் துளைக்கும். இவற்றை ஆசை தீரச் செவிமடுப்பதற்காகக் காது மூட நீண்ட முடி வளர்த்துக் கொண்டு நிற்கும் இள வட்டங்களின் கும்பலுக்கும் இங்கு குறைவில்லை.

இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டே நான் நடப்பேன். பல சமயம் சாலையில் செல்



லும் பாதசாரிகள் கூடி நின்று கன கார சாரமாக வாதமிடுவதையும் கேட்பேன். அவர்களுடைய பேச்சு பெரும்பாலும் திரையுலக நட்சத்திரங்களின் அந்தரங்க வாழ்க்கையைப் பற்றியதாக இருக்கும். எனவே, சுவையாகவும் இருக்கும்.

அந்தரங்கச் சுவைக்கு ஒரு தனி அழகு உண்டு தானே?

இப்படியே நாட்கள் போய்க் கொண்டிருந்தன. திடீரென்று ஒரு நாள் கங்கைக் கரையிலே ஒரு துறவி உடல் முழுவதும் நீறு பூசிக் கொண்டு அமர்ந்திருப்பதைக் கண்டேன். அவரைச் சுற்றி ஒரு சிறு கும்பல். எதிர்த்தாற்போல் தூபக்கால். அதில் சாம்பிராணி புகைந்து கொண்டிருந்தது. பார்வையைச் சுழற்றிய பொழுது நாற்சந்தியிலிருந்த தேநீர் விடுதியிலிருந்து துறவிக்காகத் தேநீர் வருவதைக் கண்டேன். என் கால் என்னையறியாமலே என்னை அவரருகே இட்டுச் சென்றது. அங்கு போய் நின்ற நான் ஆர்வம் குறுகுறுக்க என்னை நானே 'இந்தத் துறவி திடீரென்று இங்கே எப்படி முளைத்தார்? எப்பொழுது வந்தார்? ஏன் வந்தார்? இவர் எங்கே சாப்பிடுவார்? என்ன சாப்பிடுவார்? எங்கே தூங்குவார்?' என்று ஒரு கேள்வியா, இரண்டு கேள்வியா? - பல பல கேள்விகளைக் கேட்டுக் கொண்டேன்.

எதிரே உட்கார்ந்திருந்தவர்களும் துறவியிடம் நேரடியாக என்னவெல்லாமோ கேள்விகள் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

''சுவாமிகளின் அருள் வேண்டும்!'' என்றார் ஒருவர்.

'அருளா? என்ன அருள்? அது எப்படி இருக்கும்? அருளை ஒருவர் எப்படி வழங்க முடியும்?'' — இதையெல்லாம் என்னால் விளங்கிக் கொள்ள முடியவில்லை. அதோடு அருள் புரியக் கூடிய அற்புத ஆற்றலோ தெய்விக சக்தியோ அந்தத் துறவியிடம் இருக்கக் கூடும் என்பதாகவும் என் அறிவுக்கெட்டிய வரையில் எனக்குப் படவில்லை.

''சுவாமி எங்கிருந்து வந்திருக்கிறதோ?'' ஒரு பக்தர் கைகட்டி வாய் புதைத்துக் கேட்டார்.

''இமயத்திலிருந்து!''

பதிலைக் கேட்டு நான் வியந்து போனேன்

உலகத்தில் இத்தனை இடங்கள் இருக்க, இமயத்திலிருந்து இறங்கி வந்த சுவாமிகளுக்குக் கல்கத்தாவில் உள்ள இந்த இடம் தானா தங்குவதற்குக் கிடைத்தது?

ஆனால் பக்தி ஆழப் பதிந்து வேரோடி விட்டால், அந்த இடத்திலே யுக்திக்கு இடம் ஏது? பக்திக்கெதிரே யுக்தியை யார் தான் சிந்துவார்கள்? பக்திப் பெருவெள்ளத்திலே யுக்தியும் தர்க்கமும் துரும்பாக அடித்துச் செல்லப்படுவதுதானே இயல்பு? ஆடிக்காற்றில் அம்மியும் பறக்குமாம் போல்! என்றாலும் மனித சமுதாயத்திலே எப்பொழுதாவது ஒரு முரண்பாடு காணப்படுமானால், மனிதனிடத்தில் ஆர்வம் தலைதூக்கத்தான் செய்கிறது.



## காந்திஜீ அரிசனங்களைக் கடவுளின் குழந்தைகள் என்றார்.

## கடவுளின் அந்த குழந்தைகள் இன்று புது வாழ்வு பெற்று விட்டார்கள்!

1976 நவம்பர் 19ல் திருத்தியமைக்கப்பட்ட புதிய குடிமை உரிமைகள் பாதுகாப்புச் சட்டம் அமுலுக்கு வந்தது. இச் சட்டத்தின்படி தீண்டாமைக் குற்றங்கள் அனைத்திற்கும் அபராதமும் சிறைவாசமும் விதிக்கப்படும்.

மேலும் அரிசனங்கள் பிற்பட்ட வகுப்பினர் ஆகியோரின் நிலைமையைச் சீர்படுத்தி உயர்த்த தமிழ்நாட்டில் ஆக்கபூர்வமான நடவடிக்கைகள் பல மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன.

காவல் துறைத் துணைத் தலைவர் ஒருவரின் பொறுப்பின் கீழ் சிறப்புப் பிரிவு ஒன்று குடிமை உரிமைகள் பாதுகாப்புச் சட்டத்தை அமுல்படுத்த அமைக்கப்பட்டுள்ளது.

அரசு நிலங்களிலிருந்து 38,134 வீட்டு மனைகள் அரிசனங்களுக்கு அளிக்கப்பட்டன. மேலும் கையகப்படுத்திய நிலங்களிலிருந்து 15,457 வீட்டு மனைகள் வழங்கப்பட்டன.

ஏழை அரிசன மக்கள் அனைவருக்கும் அடுத்த இரண்டு ஆண்டுகளில் இலவச வீட்டு மனைகள் வழங்க அரசு முடிவு செய்துள்ளது. 1976-77ஆம் ஆண்டில் வீட்டு மனைகள் வழங்கியதற்கு ஆகிய செலவு ரூ. 52 லட்சமாகும். கடந்த ஆண்டில் ரூ. 25 லட்சமேயாகும்.

எஸ். எஸ். எல். சி. தேர்வில் 60 சத விகிதம் மதிப்பெண் பெறுகின்ற அனைத்து அரிசன மாணவர்களுக்கும் ரூ. 300 உதவித் தொகை வழங்கப்படுகின்றது.

மாநிலத்தில் உள்ள 189 கலைக்கல்லூரிகளிலும் புகுமுக வகுப்பிலும் பட்ட வகுப்பிலும் பயிலுகின்ற அரிசன - பழங்குடி மாணவர்கள் அனைவருக்கும், மூன்று மாத காலத்திற்கு இலவசமாக சிறப்புப் பயிற்சி அளிக்கப்படுகின்றது.

33 புதிய அரிசன மாணவர் விடுதிகள் 31-3-'77க்குள் கட்டி முடிக்கப்படும். மேலும் 17 புதிய விடுதிகள் கட்ட அனுமதிக்கப்பட்டுள்ளது.

இதர பொதுவான துறைத் திட்டங்களின் கீழ் அரிசன மக்கள் நலனுக்காக ரூ. 15 கோடி செலவிடப்பட்டுள்ளது.

1976ஆம் ஆண்டில் 400 அரிசனக் குடியிருப்புகளுக்கு ரூ. 32 லட்சம் செலவில் மின் வசதி அளிக்கப்பட்டுள்ளது.

1976-77ல் 725 அரிசனக் குடியிருப்புகளுக்கு குழாய்க் கிணறுகள் அமைக்கப்பட்டுள்ளன. முந்திய ஆண்டில் 262 அரிசன குடியிருப்புகளுக்கு மட்டுமே அமைக்கப்பட்டுள்ளன.

அரிசனப் பழங்குடி மக்களுக்குத் தொழில் சார்ந்த நிறுவனங்களிலும் கல்வி நிலையங்களிலும் வேலை மற்றும் படிப்புக்கான இடங்களை ஒதுக்குவது தொடர்பான விதியை அமுல்படுத்த கண்காணிப்புக்குழு வொன்று அமைக்கப்பட்டுள்ளது.



கடவுளின் குழந்தைகளுக்கு இன்று நாடு உரிமை யளித்து உரிய நீதி வழங்குகிறது.

எல்லோரும் ஓர் குலம். இந்நாட்டில் நாம் எல்லோரும் இந்திய மக்கள்.

Criterion-DIPR-7072/77-9

அந்த ஆர்வத்தில் மிதந்து நானே கேட்டேன்: ''சுவாமிகளுக்கு ஆகாரம் என்னவோ?''

''சுவாமிகளுக்கு ஆகாரமே கிடையாது!'' இது ஒரு பக்தர் அளித்த பதில்.

''ஒன்றும் சாப்பிடாமல் மனிதனால் உயிர் வாழ முடியாது. ஏதாவது சாப்பிடுபவராயிருக்கும்!'' என்றேன் நான்.

''இல்லை, சார்! நேற்று முதல் நானும் முயற்சி செய்து பார்க்கிறேன். நாற்சந்திக் கடையிலிருந்து ரசகுல்லா, பேடா, பழம் என்று தருவித்து அவர் முன் படைத்தேன். சுவாமிகள் அவற்றை ஏறெடுத்துக்கூடப் பார்க்கவில்லை. கடைசியில் மக்களுக்கே பிரசாதமாக வழங்கி விட்டோம்!'' என்று அடித்துக் கூறினார் அந்தப் பக்தர்.

''ஆமாம், இப்பொழுது தேநீர் தருவிக்கப் பட்டதே. அது....?'' இழுத்தேன் நான்.

''குருஜி அதையும் தொட மாட்டார். அவரெதிரே அது ஆறி அவலாகிப் போகும். கடைசியில் எங்களில் யாராவது தான் அதையும் குடித்தாக வேண்டும். தினமுமே இந்த நிலைதான்!'' என்றார் பக்தர்.

''சுவாமிகள் தூங்குவதும் இல்லையா?'' என் ஆர்வம் என்னைத் தூண்டி இந்தக் கேள்வியைக் கேட்க வைத்தது.

''நேற்று இரவு நானே இரண்டு மணிவரை விழித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தேன். சுவாமிகள் ஒரே நிலையில் ஆடாமல் அசையாமல் அமர்ந்திருந்தார். என்ன யோக முத்திரை, போங்கள்! சுவாமிகளிடத்தில் அற்புதமானதொரு தெய்வீக சக்தி இருக்கிறது!''

சுவாமிகள் பத்மாசனம் இட்டு அமர்ந்திருப்பதை நானே கண்டேன். எதிரே பக்தர்கள் கூட்டம் நின்று கொண்டிருந்தது. ஆனால் சுவாமிகளின் கவனம் எதிலுமே செல்லவில்லை. கூடியிருந்த கூட்டத்தை இமையாமல் பார்த்துக் கொண்டிருந்தார். நான் எத்தனை நேரம் தான் நிற்பது? அலுத்து விடவே, மெதுவாக நான் வீட்டை நோக்கி நடையைக் கட்டினேன்.

அதற்குப் பின் தினமும் அவ்வழியே போகலானேன். தினமும் அதே காட்சி காணக் கிடைத்தது. அதே முகம்; அதே பாவம்! ஒரு சில நாட்களுக்குப் பின் மாறுதல் என்னவென்றால், எதிரே ஒரு திரிசூலம் நடப்பட்டிருந்தது. முன்பெல்லாம் இது இல்லை. திரிசூலத்தின் நெற்றியில் குங்குமம் சாத்தப்பட்டிருந்தது. யாரோ ஒரு பக்தர் தம் கைக் காசைச் செலவிட்டுக் கடைத் தெருவிலிருந்து அதை வாங்கி வந்து வைத்ததாகக் கேள்விப்பட்டேன்.

நானும் தினமும் கங்கைக் கரையில் அத்தனை தூரம் போய் வருவதை என் பழக்கமாக்கிக் கொண்டு விட்டேன். நாளுக்கு நாள் பக்தர் கூட்டம் பெருகி வருவதையும் கவனித்தேன். முதல் நாள் ஐந்து ஆறு பேர் தான் இருந்தார்கள். மறுநாள் பதினைந்து இருபது ஆகியது. அப்புறம் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாகப் பெருகலாயிற்று. நாற்சந்தியிலிருந்து குழந்தைகளும் குட்டிகளும் வந்து குவியலாயின. அவர்கள் சுவாமிகளைச் சுற்றி வட்டமாக உட்காருவார்கள்; அவருடைய முகத்தையே வைத்த கண் வாங்காமல் பார்ப்பார்கள். சுவாமிகளும் தியானத்தில் லயித்து எங்கோ வெறிக்கும் கண்களுடன் அவர்களைப் பார்ப்பார். பார்வையில் ஓர் உணர்ச்சியும் இராது. எப்படித்தான் அவரால் அப்படி இமை கொட்டாமல் இருக்க முடிந்ததோ?

கொஞ்ச நாட்களுக்கெல்லாம் மாரிக் காலம் தொடங்கியது. சுவாமிகளின் பரமார்த்த சீடர் ஒருவர் திரிசூலம் நனையாமல் இருக்க, அதன் தலைக்கு மேல் ஒரு குடையை நிறுத்தினார். அந்தக் குடை நிழலிலே சுவாமிகள் பத்மாசனமிட்டுப் புலன்களை அடக்கிப் பெரும் துறவியாகக் காட்சி தரலானார்.

அப்புறம் ஒருநாள் இரவுக்கிரவே அங்கே கொட்டகை ஒன்று மயன் படைப்பென உருவாகியது. நாற்புறமும் சுவர் ஏதும் எழுப்பவில்லையென்றாலும் பக்தர்கள் வெய்யிலில் காய்ந்து மழையில் நனையாமல் இருக்க வேண்டுமென்ற நல்லெண்ணத்தில் யாரோ பசையுள்ள பக்தர் ஒருவர் தம் செலவில் கொட்டகை வேய்ந்து கொடுத்திருந்தார். அதைத் தொடர்ந்து சுவாமிகள் தங்கியிருந்த இடத்தில் பஜனைப் பாடல்களும் சூடு பிடிக்கலாயின. நானா வட்டத்தில், நாற்சந்தியில் உள்ள பெரிய பெரிய வீடுகளின் வராந்தாவிலிருந்தும், தேநீர்க் கடைகளின் மரப் பெஞ்சுகளிலிருந்தும் திரைப்படப் பாடல்களையே கேட்டுப் பழகியவர்கள் கூடச் சுவாமிகளின் சந்நிதானத்தில் கூடலாயினர். பாண்டும் ஷர்ட்டும் போட்டுக் கொண்டு திரைப்படப் பாடல்களில் ஊறித் திளைக்கும் நவநாகரிக இளைஞர்கள்கூட அவற்றை மூட்டை கட்டி வைத்து விட்டு, பஜனை கோஷ்டியோடு குரல் இணைத்துப் பாடத் தொடங்கினர் என்றால் சுவாமிகளின் பெருமைக்கும் பக்தியின் வலிமைக்கும் வேறு என்ன சான்று வேண்டும்?

கங்கைக் கரையோடு சென்று கொண்டிருந்த எனக்கு ஒரு நாள் என்னையே அடக்கிக் கொள்ள முடியவில்லை. சாம்பிராணியின் நறுமணம் காற்றிலே கலந்து வந்து கொண்டிருந்தது. நான் ஆவலோடு நின்று பார்த்தேன். சுவாமிகளுக்கு எதிரே குங்குமத்தில் குளித்த சிலை ஒன்று புதிதாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தது. ஜால்ரா 'ஜல்ஜல்' ஒன்று ஒலிக்கப் பஜனை பிரமாதமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. பஜனை முடிந்த பின் நான் வீடு திரும்பப் புறப்பட்டேன். சில அடிகள் எடுத்துவைப்பதற்குள்ளாக என் எதிரிலே ஒரு பெண்மணி வந்து நின்றாள். அவள் சிவப்புக்கரை போட்ட சேலை உடுத்தியிருந்தாள். நல்ல சிவந்த மேனி. நெற்றியிலே ஒரு குங்குமப் பொட்டு, கனக் கச்சிதமாக. இலைக்குள் சுருட்டி மடக்கியிருந்த ஏதோ ஒரு பொருளை எடுத்து நீட்டி, ''இந்தாருங்கள்! கொஞ்சம் பிரசாதம் பெற்றுக் கொள்ளுங்கள்!'' என்றாள்.

குரலைக் கேட்டு நான் துணுக்குற்றேன். பரிசயமான குரலாகப்பட்டது. இந்தக்குரலை நிச்சயம் நான் எங்கேயோ கேட்டிருக்கிறேன். எங்கே? — விளங்காமல் போகவே, அந்தப் பெண்மணியைப் பார்த்தேன். பார்த்த பின், அவளை எங்கேயோ பார்த்திருப்பதாகத் தோன்றியது. எங்கே....? (தொடரும்)

---

நியூயார்க் கடை ஒன்றில் உள்ள அறிவிப்பு: ''புகார் சொல்லும் இடம் பத்தாவது மாடியில் இருக்கிறது. லிஃப்ட் இயங்கவில்லை; தயவுசெய்து மாடிப் படி வழியாகப் போகவும்.''
-வேர்ல்ட் நியூஸ் - ராமு



## கதிராமங்கலம் ஸ்ரீ வனதுர்கா பரமேஸ்வரி

# கோடி அர்ச்சனை

காவிரிநதியின் வடகரையில் நவதுர்கா க்ஷேத்திரங்களுள் ஒன்றும் ஸ்ரீ வெமல்விகாவந க்ஷேத்ரமென பிரசித்தி பெற்றதும் கவிச்சக்கரவர்த்தி கம்ப நாட்டாழ்வாரால் கதிர்வேய்ந்தமங்கலம் என்று சிறப்பிக்கப் பெற்றதுமான கதிராமங்கலத்தில் ஸ்ரீ ம்ருகண்டு மஹரிஷியால் பூஜிக்கப்பெற்று ஸ்ரீ வனதுர்கா ஸ்வரூபிணியாய் விளங்கும் ஸ்ரீ வனதுர்கா பரமேஸ்வரிக்கு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளின் அநுக்ரஹத்துடனும், திருவாவடுதுறையிலும், தருமபுரத்திலும் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகா ஸன்னிதானங்களின் ஆசியுடனும் கடந்த சாரதா நவராத்திரியில் லக்ஷார்ச்சனை தொடங்கி இதுவரை ஐந்து லக்ஷத்திற்குமேல் நடந்துள்ளது. லோக க்ஷேமார்த்தமாகக் கோடி அர்ச்சனையாகப் பூர்த்தி செய்ய ஸ்ரீ வனதுர்கா பரமேஸ்வரியின் அருளால் நிச்சயிக்கப்பெற்று ஒரு கமிட்டியும் ஏற்படுத்தப்பெற்று நடந்து வருகிறது.

பக்தர்கள் இப்புண்ணிய கைங்கர்யத்தில் பங்கு பெற்று ஸ்ரீ வனதுர்கா பரமேஸ்வரியின் அருளால் இஷ்டசித்திகளைப் பெறுவார்களாக. இத்திருக்கோயிலில் ராஜ கோபுரத் திருப்பணியும் பக்தர்கள் தங்கித் தரிசிப்பதற்காக ஒரு மண்டபமும் அமைக்க வேண்டியுள்ளது. இதற்குத் தனியாக நன்கொடை அளிக்க விரும்புவோரும், லக்ஷார்ச்சனையில் பங்கு கொள்வோரும் தம் உபயத்தைப் பொருளாளர் முகவரிக்கு நக்ஷத்திரம், பெயர், முகவரி முதலிய விவரங்களுடன் அனுப்பி வைக்கலாம். கோடி அர்ச்சனையில் மிஞ்சும் தொகை மேற்படி திருப்பணிக்குப் பயன்படுத்தப்பெறும். இப்படிக்கு,

**கோடி அர்ச்சனைக் கமிட்டி**

**ஸகஸ்ரநாம அர்ச்சனை 1க்கு ரூ. 10/-ம், லக்ஷார்ச்சனை (ஆறு ஸகஸ்ரநாமம்) ரூ. 800/-ம், கோடி அர்ச்சனையில் வைக்கப்பெறும் ஸ்ரீ வனதுர்காதேவி உருவம் ஒரு புறமும், ஸ்ரீ துர்காயந்த்ரம் மறுபுறமும் அமைந்த வெள்ளிக் காசு ஒன்றுக்கு ரூ. 5/- தனி.**

தொகை அனுப்ப வேண்டிய முகவரி: **கே. வி. ஸ்வாமிநாதன்,** பொருளாளர், ஸ்ரீ வனதுர்கா பரமேஸ்வரி கோடி அர்ச்சனைக் கமிட்டி, கதிராமங்கலம் P. O. குத்தாலம் (வழி) தஞ்சை மாவட்டம்

# ஃபாஸ்ஃபோமின்

**குடும்பத்தினர் அனைவரும் ஆரோக்கியத்துடன் திகழ ஃபாஸ்ஃபோமின்**






**உங்கள் வாழ்வு இன்ப மயம்—
ஆரோக்கியம் இருக்கையில் என்ன பயம்!**

SARABHAI CHEMICALS LTD.

# மதுர நாயகி

பி.வி.ஆர்

இறையனுர் அகப் பொருளுக்கு உரை எழுதிய நக்கீரர் முச்சங்க வரலாற்றைக் குறிப்பிடுகிருர்:

1. தலைச் சங்கம் — 4440 வருடங்கள் இருந்தன. 549 புலவர்கள் வீற்றிருந்தனர். 4449 புலவர்கள் பாடல்களை அரங்கேற்றினர்.
2. இடைச் சங்கம் — 3700 ஆண்டுகள். அகத்தியர், தொல்காப்பியர் உட்பட 59 புலவர்கள் வீற்றிருந்தனர். 3700 புலவர்களுடைய பாடல்கள் அரங்கேற்றமாயின.
3. கடைச் சங்கம் — 1850 ஆண்டுகள். நக்கீரர் உட்பட 49 புலவர்கள் இருந்தனர். 449 புலவர்கள் பாடல்களை அரங்கேற்றினர்.

நாலாவது சங்கத்தை நிறுவத் துடிக்கிருர், கண்டிராக்டர் ஆடியபாதம். சங்கப் பலகை தயாராகிறது.

## 11

எதிர்பாரா வண்ணம் ஹரிணியுடன் நேர்ந்த சந்திப்பும், அதைத் தொடர்ந்த மோதலும் லாவண்யாவைக் கலக்கி விட்டன. என்னதான் சரிக்குச் சமமாக வார்த்தையாடி விட்டு ஹரிணியைப் பிரிந்து வந்தபோதிலும், அவளுடைய வார்த்தைகளின் எதிரொலி இன்னும் அடங்கவில்லை. ரத்தம் இன்னும் கொதித்துக் கொண்டிருந்தது. வக்கீல் புதுத் தெருவுக்கு வந்த வேளையே சரியில்லை என்று தன்னையே நொந்துகொண்ட லாவண்யா, சோர்ந்து போய் நடக்கலானுள். அன்று பிற்பகல் மத்தியப் பிரதேசத்திலிருந்து வரவிருக்கும் பழங்குடி மலைவாசிகளோ, மறுநாள் வரப்போகிற கானடா நாட்டு யாத்திரிகர்களோ அவர்களால் கிடைக்கக் கூடிய இருபது ரூபாயோ மனத்தில் முட்டவில்லை.

ஹரிணி பெரிய வக்கீல் வீட்டுப் பெண், பி.ஏ., எம். ஏ., எல்லாம் படித்தவள். ராமையாவின் பல லட்சங்களுக்கு ஒரே வாரிசு என்றெல்லாம் அவளுக்குத் தெரியும். ரமணி ராமையாவிடம் ஜூனியராகச் சேர்ந்த பின், வீட்டுக்கு வந்து, அம்மா, அப்பாவிடம் பேசும்போதெல்லாம் ஸீனியர் வீட்டைப் பற்றியும் ஓரிரண்டு வார்த்தைகள் பேசுவான். ஹரிணியை அவன் சந்தித்த கதையையும் பிறகு அவள் மூலமாக ராமையாவிடம் சேர்ந்த புராணத்தையும் அவன் எவ்வளவோ தடவைகள் கூறியிருக்கிருன். கதவோரமாக நின்றுகொண்டு லாவண்யா கேட்டிருக்கிருள்.

இத்தனை காலமாக அவள் கல்லூரியில் பார்த்த ஹரிணியையும் கேள்விப்பட்டிருந்த ஹரிணியையுமே நினைவில் வைத்துக்கொண்டு அவளை எடை போட்டிருக்கிருள். எல்லோரிடமும், ஆண் — பெண் வித்தியாசமில்லாமல் பழகும் கல்மிஷமில்லாத பெண் என்றுதான் அவள் ஹரிணியைப் பற்றி நினைத்திருந்தாள். நையாண்டியும் நெக்கலும் அவளுக்குக் கைவராத கலைகள் என்று தோன்றியிருந்தது. பெரிய பணக்கார வீட்டுப் பெண் ஆடம்பரமின்றி இருப்பதாக நினைத்துச் சந்தோஷம் கூடப் பட்டிருக்கிருள். ரமணியின் ஸ்நேகிதியான ஹரிணியைப் பற்றி, தேவைக்கு அதிகமாக லாவண்யா சிந்திப்பதற்குக் காரணமே, அவள் ரமணியின் காதலியாக மாறிவிடுவாளோ என்ற சந்தேகமும் பயமும்தான். அவளும் ரமணியை விரும்பி யிருந்தால், லாவண்யாவின் இந்தப் பயத்துக்கு அர்த்தமிருந்திருக்கும். ஆனுல் ரமணியைப் பற்றிப் பல தடவை நினைக்கும் அவளுடைய மனத்தில் இன்னும் காதல் அரும்புகூட கட்டவில்லை. ரமணி வீட்டுக்கு வந்தாலே அவளுக்கு ஒரு குதூகலம் பிறக்கும். நேரடியாக இருவரும் அதிகம் பேசிக் கொள்வதில்லை என்ருலும் இருவருமே பரஸ்பரப் பார்வைகளால் மன நிறைவு பெறுகிருர்கள் என்பதையும் அவள் உணர்வாள். எப்போதாவது ஒருசில வேளைகளில், ரமணி தனக்குக் கணவனாக வந்தால் எதிர்காலம் எப்படி இருக்கும் என்று கற்பனை செய்வாள். அடுத்த கணமே எட்டாப் பழம் என்று சிந்தனை வேறு திசையில் செல்ல ஆரம்பித்து விடும்.

மனத்தின் அடியில் எட்டாப் பழத்துக்காகப் படும் ஆசைதான், ஹரிணி ரமணியின் காதலியாகி விடுவாளோ என்ற பயத்தைக் கிளப்பி விட்டிருக்கிறது. இதை அவள் உணரவில்லைதான். உணர்ந்திருந்தால், அவளும் ரமணியைத் தீவிரமாகக் காதலித்திருந்தால், அவளுடைய காதல் வெளியே ஹரிணியைக் கிழித்துப் போட்டிருக்கும். மாருக, ஹரிணி அவளைக் கிழித்துப் போட்டு விட்டுப் போய்விட்டாள்.

சிந்தனையூடே நடந்ததில் அவளுக்குக் கூட்ஸ் ஷெட் தெரு வந்தது கூடத் தெரியவில்லை.

கண்டிராக்டர் ஆடியபாதம் உணர வைத்தார். ''என்னம்மா கொழந்தே, பார்க்காமயே போறே... முகம் பார்த்து, சௌக்கியமான்னு ஒரு வார்த்தை கேட்கப்படாதா?''

''நான் கவனிக்கவே யில்லை, பண்டிதரே!''

ஆடியபாதம் பெரிய கண்டிராக்டர். சிற்றுளிலிருந்து லட்சாதிபதியாக உயர்ந்தவர். அவர் கட்டாத ஆஸ்பத்திரியோ, பள்ளிக்கூடமோ, சினிமாத் தியேட்டரோ இல்லை. சோமசுந்தரம் காலனியிலும், நரிமேடு, சின்னச் சொக்கிகுளம், சுப்பிரமணியபுரம் போன்ற பகுதிகளிலும் அவர் கட்டிக் கொடுத்த வீடுகளுக்குக் கணக்கில்லை. ஆடியபாதம் வீடு கட்டிக் கொடுத்தால் மூன்று தலைமுறைகளுக்கு வீடு ஆடாது என்று பலர் மனமார வாழ்த்தி யிருக்கிருர்கள்.

இந்த நல்ல பெயருக்குக் காரணம், ஒரு மராமத்துக் கண்டிராக்டருக்கு இருக்கிற குணாதிசயங்கள் அவரிடம் இல்லாததுதான். பொய் புரட்டு கிடையாது. ஏழை, நடுத்தர வர்க்கத்தினர் வாயைக் கட்டி வயிற்றைக் கட்டிச் சேர்த்த பணத்தில் தலைக்கு மேல் ஒரு சொந்தக் கூரை இருக்க வேண்டும் என்ற ஒரே ஆசைக்காக வீடு கட்டுகிறவர்கள் என்பதை அவர் உணர்ந்தவர். ஏழையின் கண்ணீர் தம்மை அழிக்கக் கூடாது என்று பயப்படுகிறவர்.

இந்த ஆடிய பாதம் ஒரு காலத்தில் பலராமனுடன் தமுக்கம் மைதானத்தில் காற்றாடி விட்டவர். பலராமன் ஒரு வாட்ச் பையனாகப் போக ஆடியபாதம் ஒரு கண்டிராக்டரிடம் சிற்றாளாகப் போனான். ஒருவர் ஓகோ என்று வளர்ந்து இன்னொருவர் அடி மட்டத்திலேயே இருந்த போதிலும் பரஸ்பர அன்பும் அபிமானமும் குன்றவேயில்லை. ஆடியபாதம் ஒரு படி மேலே போனார். பலராமனுடைய குடும்பத்தையும் தெரிந்து வைத்துக்கொண்டு, அவ்வப்போது பலராமனுடைய மனம் புண்படாத வகையில் உதவிகள் செய்து வந்தார்.

லாவண்யாவை இப்போது பார்த்தபோது திடீரென்று அவளுடைய காது குத்தல் நினைவுக்கு வந்தது. புதிதாகக் குத்திய காதில் ஆடிய பாதம் பரிசாகக் கொடுத்திருந்த தங்கக் கம்பி ஒளிர்ந்தது நினைவுக்கு வந்தது.

''பரவாயில்லை!'' என்ற ஆடிய பாதம், தம்மை லாவண்யா பண்டிதர் என்று அழைத்து விட்ட சந்தோஷத்தில், ''கூல் ட்ரிங்க் ஏதானும் சாப்பிடறியா?'' என்று கேட்டார்.

''வேண்டாம், சார்!''

பண்டிதர் மறைந்து சார் பிறந்தது குறித்து வருத்தம்தான். இருந்த போதிலும், அவர், ''நீ இள நீரிலே நன்னாரி ஷர்பத் போட்டுச் சாப்பிட்டிருக்கிறயா? பிரமாதமா யிருக்கும். கொஞ்சம் ஐஸூம் போட்டால் இன்னும் ஜோர்.''

''வேண்டாம் பண்டிதரே! மணி இப்ப ஒன்பதாகிறது. வீட்டுக்குப் போய்ச் சாப்பிடணும்.''

''அப்படியா ... பல்ராமன் எப்படி இருக்கான்?'' பலராமனை அவர் பல்ராமன் என்று தான் அழைப்பது வழக்கம்.

'அப்பாவுக்கு கான்சர்' என்று சொல்லுவதா, வேண்டாமா, என்று ஒரு கணம் யோசித்த லாவண்யா மறுகணமே, ''இருக்கார்'' என்றாள். பிறகு, ''அப்பாவைப் பற்றிய பேச்சு மீண்டும் முளைக்கக் கூடாது என்ற எண்ணத்தில், ஆடியபாதத்தின் மனத்துக்கு மிகவும் பிடித்த சங்கப் பலகையைப் பற்றி விசாரித்தாள்.

''பண்டிதரே! பலகை எப்படி இருக்கு. எவ்வளவு நீளம்? எவ்வளவு அகலம்?''

''அஞ்சுக்கு மூணு. ஒரு ரா வந்து பாரு. வெள்ளைக்காரர்களை அங்கே இங்கேன்னு ஊர் சுத்திக் காட்டிணியே, நம்ம பலகையையும் காட்றது!''

''அஞ்சடி நீளம்னு குழந்தை தான் படுத்துக்க முடியும்.'' ஆடியபாதத்தைச் சந்தித்ததில் லாவண்யா ஹரிணியை ஒருவாறு மறந்து போயிருந்தாள்.

''இது படுத்துக்க இல்லே கொழந்தே... ஒக்கார ... முதல் சங்கம் ரெண்டாம் சங்கம் கேள்விப்பட்டதில்லையா, நீ?''

''மூணும் சங்கம்கூட உண்டு பண்டிதரே!''

''என் ஆசையெல்லாம், ஒரு நாலாம் சங்கத்தை உருவாக்கிடணும். பலகை வேலை நல்லபடியா முடிஞ்சா, ஒரு பெரிய ஆளை



வீட்டுக் குளத்திலே எறக்கிடுவேன். அப்புறம் யார் புலவன், யார் போலின்னு நமக்குத் தெரிஞ்சுடும்.''

''யாருக்கும் தோணாத அபார யோசனை உங்களுக்குத் தோணியிருக்கு, பண்டிதரே!''

''நீயே பாரேன், கொழந்தே, நான் எப்படி எப்படி என் பணத்தைத் தமிழுக்காகக் கொட்டப் போறேன்னு! ஒரு பயலுக்காவது தமிழ் மேலே உசிர் இல்லே.... தமிழ், தமிழ்னு மேடை மேலே மழையா கொட்டி, சோடாலைக் குடிக்கிறாங்களே ஒழிய என்னை மாதிரி உசிரை விடறதில்லே.''

''சங்கப் பலகை மிதக்கும், எத்தனை பேர் வேணும்னாலும் உட்காரலாம், அது தானு நீளும்னெல்லாம் படிச்சிருக்கேனே, உங்க பலகை எப்படி?''

''நாலாவது சங்கப் பலகை கண்டிப்பா மொதக்கும். அதுக்கு நான் ஜவாப். ஆனு நீளாது கொழந்தே.... பைத்தியக்காரத்தனமா அமெரிக்கா, ஜெர்மனிக்கெல்லாம் எழுதிப் பார்த்தேன். ஒரு பயலாவது சாத்தியம்னு சொல்லணுமே... உஹூம்....''

''ஆரம்ப விழாவுக்கு என்னைக் கூப்பிட மறந்துடாதீங்க....''

''ஹஸ்.... நீ ஒண்ணு.. பல்ராமன் குடும்பம் இல்லாமலா, நான் குளத்திலே எறங்குவேன்.''

''அப்ப நான் வரேன், பண்டிதரே.''

''இளநீர், இல்லே நன்னாரி ஷெர்பத்...''

''இன்னொரு நாள் பார்த்துக்கலாம்.''

''ஒரு நா நம்ம வீட்டுக்கு வா.... ஏன் இன்னிக்குச் சாயந்திரமே வாயேன், பதினெண் கீழ்க்கணக்கு ஆரம்பமாகிறது. நம்ம தமிழ் வாத்தியார், ஆலாலம் பிள்ளைதான் நடத்தறார்.''

''எனக்குக் கரடுமுரடு தமிழ் பிடிக்காது பண்டிதரே. ஏன்னு அது புரியாது.''

''ரெத்தை வேணும் குழந்தே. இப்ப என்னைப் பாரு. சாக்பீஸ் திருடறதுக்குக்கூட நான் ஸ்கூல் போனதில்லே.... ஆனு என்னை மதுரை முழுகம் பண்டிதர்னு கூப்பிடுறாங்க... நானு கேட்டேன் இந்தப் பட்டம்.''

''நீங்க தமிழ் படிச்சீங்க.''

''தமிழ் படிச்சேனு? கரைச்சுக் குடிச்சிருக்கேன் கொழந்தே... கரடு முரடாயிருக்கிற மலையை எல்லாம் ரோடு போடணும். தமிழையா கத்துக்கிட்டு, புரிஞ்சுக்கிட்டு ரசிக்க முடியாது.''

''முடிஞ்சா வரேன் பண்டிதரே!''

லாவண்யா வீட்டை நோக்கி நடந்தாள். நேர்மையான கண்டிராக்டர், சூது வாது தெரியாத மனிதர் என்றெல்லாம் பெயர் எடுத்த இந்த ஆடியபாதம் தமிழ் மொழி விஷயத்தில் மட்டும் ஏன் ஒரு கிறுக்காக இருக்கிறார் என்று அவளுக்குப் புரியவில்லை.

மேடை ஏறி இரண்டு வார்த்தைகள் தமிழில் பேச வராது அவருக்கு. ஆனால் அந்தக் கலையில் விற்பன்னர்களாக இருப்பவர்களை மேடை ஏற்றுவதில் பரம ஆனந்தம் அவருக்கு. வருடா வருடம் மதுரையில் தமிழ் விழா நடத்தி ஆயிரக்கணக்கில் செலவு செய்திருக்கிறார். நினைத்தால் ஒரு பட்டிமன்றம். அவர் நடத்தும் பட்டிமன்றங்களில் கூட்டம் இப்படி அப்படி என்றில்லை. இவ்வளவுக்கும் ராமாயண மகாபாரதங்களிலிருந்து அவர் பாத்திரங்களை எடுத்துக் கொள்ளவில்லை. அகநானூறு, புறநானூறு, நாலடியார் என்று அலசினார்.

தமிழ்ப் பற்று நாளடைவில் ஒரு வெறியாக மாறியது. இந்த வெறியில் அவர்





**ஆலோசனை கூறி உதவக்கூடிய மனம் உள்ளவனுக்கு மட்டுமே விமரிசிக்கக்கூடிய உரிமை இருக்கிறது. — ஆபிரகாம்லிங்கன் - சாமி**

சங்கப்பலகை ஒன்றை, நல்ல மலையாள பலா மரத்தில் செய்ய ஏற்பாடு செய்தார். கடந்த மூன்று ஆண்டுகளில் நூற்றுக்கும் மேற்பட்ட பலகைகளைச் செய்து, அவை சரியில்லை என்று ஒதுக்கியிருக்கிறார்.

மதுரையில் பாதிப் பேர் அவரைக் கண்டு சிரிக்கிறார்கள். மீதிப் பேர் சிரிப்பை அடக்கிக் கொள்ளுகிறார்கள். ஆடியபாதம் ஏன் நான்காம் சங்கத்தை உருவாக்குவதில் இவ்வளவு தீவிரம் காட்ட வேண்டும்?''

லாவண்யாவுக்குப் புரியவில்லை. தங்கம் தியேட்டருக்கு முன்னால் நிற்கும், சிறு கும்பலைத் தாண்டிக் கொண்டே காக்காத்தோப்பை நோக்கி நடந்தாள்.

அவள் வீட்டுப் படியில் கால் வைக்கவும், எதிர்த் திசையிலிருந்து வந்த நீலா படி ஏறவும் சரியாக இருந்தது.

''எங்கேடீ போயிட்டு வரே, நீலா?''

''ரமணி வீட்டுக்கு.''

''ரமணி வீட்டுக்கா, எதுக்கு?''

''அம்மா போயிட்டு வரச் சொன்னா. போனேன்.''

இருவரும் சேர்ந்து உள்ளே சென்றார்கள்.

''அம்மா பசிக்கிறது!'' என்றாள் நீலா.

''ரமணி என்னடீ சொன்னான். அப்பா சொன்னதையெல்லாம் சொன்னியா..?''

''சொன்னேன் அம்மா. அவரே நேரிலே வருவாராம். கேஸ் போடக் கூடாதாம்.''

''நான் சொன்னப்போ உங்க அப்பா மண்டையிலே ஏறலே.''

லாவண்யாவுக்கு ஒன்றும் புரியவில்லை. 'எதைப் பற்றிக் கேஸ்? யார் மேலே கேஸ்?'

''என்ன விஷயம் அம்மா, எதுக்காக, யார் மேலே கேஸ் போட அப்பா நீலாவை ரமணி வீட்டுக்கு அனுப்பிச்சார்?''

''நீலா சாப்பிட உட்காருடீ.''

''இதோ....''

''ஏம்மா, நான் ஒரு பொருட்டாகவே உன் கண்ணுக்குத் தெரியலையா... நான் ஒரு விஷயம் கேக்கறேன்.... நீ நீலாவைச் சாப்பிட உட்காருங்கறே.''

''என் போக்கு உனக்குப் புரிஞ்சுட்டுதோ இல்லியோ. உன் வேலையைப் பார்!'' என்றாள் சீதாமணி.

''ஏன் இந்தப் போக்கு? நீ கேட்ட க்ஷணத்திலே நான் பாங்குக்கு ஓடிப் போய்ப் பணத்தை எடுத்து உன் மடியில் கொட்டலேன்னு தானே?''

''உன் பணத்தைக் குப்பைத் தொட்டியிலே போடுடீ, சங்கரி.''

''சீச்சீ... என்ன குணம்! நான் பணம் தந்தால் நல்லவள். உன் போக்கு ஒரு மாதிரி. பணம் தரலேன்னு நான் மோசம். உன் போக்கு இன்னொரு மாதிரி.''

நீலா ஓர் அலுமினியத் தட்டை வைத்துக் கொண்டு உட்கார்ந்தாள். பிறகு, ''நீ உட்கார்லியா?'' என்று லாவண்யாவைப் பார்த்துக் கேட்டாள்.

''அம்மாதான் நீயும் உட்கார்றியான்னு கேட்கலியே?''

சீதாமணிக்கு ஆத்திரம் பீறிட்டுக்கொண்டு வந்தது.

''நீ என்ன சம்பந்தியா, இல்லே விருந்து சாப்பிட வந்திருக்கிறவளா...? கொட்டிக்கணும்னு இருந்தால் உட்கார வேண்டியது தானே. உபசாரம் செய்யணுமோ?''

''எனக்கு இந்த வீட்டிலே சாப்பாடே வேண்டாம்.''

''ரொம்ப சந்தோஷம். பாதி நாளைக்கு வெள்ளைக்காரங்களோடுதானே கொட்டிக்கறே?...இன்னைக்கும் ஹோட்டல்லேயே சாப்பிடு!'' என்ற சீதாமணி, ''நீலா'' என்றாள்.

''என்னம்மா?''

''எப்படியாவது' எங்கேயாவது ரெண்டு ரூபாயை வாங்கி, உன் அக்கா முகத்திலே எறி! நான்தான் கார்த்தாலே சாப்பிடலியே, என் பணத்தைத் திருப்பிக் கொடுன்னு நடுராத்திரியிலே அவ கேட்பா!''

லாவண்யா ஒரே பாய்ச்சலில் பெட்டியை அடைந்தாள். அவசரம் அவசரமாகத் திறந்தாள். பாங்க் பாஸ் புக்கை எடுத்தாள்.

அதை அம்மாவின் காலடியில் வீசி எறிந்தாள்.

பிறகு, ''அதிலே எத்தனை இருக்குன்னு பார் அம்மா. எவ்வளவு வேணும்னு சொல்லு. இப்பவே போய் எடுத்துண்டு வந்துடறேன். அப்புறம் நாளைக்கு அப்பா செத்தால், என்னாலேதான் செத்தார்னு எனக்கு அவப் பெயர் வராது'' என்றாள்.

சீதாமணி பேசவில்லை.

நீலாவுக்குப் பொறுக்கவில்லை.

''ஏண்டி, ஏற்கனவே அம்மா மனசு ஒடிஞ்சு போயிருக்கா. நீ ஏன் குத்திக் குத்திக் குதர்றே? ஆயிரக்கணக்கில் பணம் சேர்த்துட்டா, நீ பெரிய மனுஷியாயிடுவியோ?''

''நீ பேசாம இருடீ!'' என்றாள் சீதாமணி. சாதத்தைப் பரிமாற வந்து கொண்டே.

''நான் சின்ன புத்திக்காரி. நான் அற்பம். நான் பேராசை பிடித்தவள். எனக்கு அம்மா, அப்பா பாசம் கிடையாது. போதுமா?'' என்றாள் லாவண்யா.

''போதும்!'' என்றாள் நீலா. அம்மா சாதத் தட்டை எடுத்துக் கொண்டு உள்ளே போனாள்.

திடீரென்று அசாதாரணமான அமைதி நிலவியது. நீலா வாய் திறவாமல் சாப்பிடலானாள். சீதாமணி ரசத்தையும் மோரையும் அவள் அருகே வைத்து விட்டு, அங்கே இருக்கப் பிடிக்காமல் பின்கட்டுக்குச் சென்றாள்.

இலேசாத மழை ஆரம்பிப்பது போல, அழுகை இலேசாக ஆரம்பித்தது.

சற்றைக்கெல்லாம் லாவண்யா கேவிக்கேவி அழ ஆரம்பித்தாள். அழுகையினூடே தூக்கி எறிந்திருந்த பாங்க் பாஸ் புத்தகத்தை எடுத்து, பெட்டியில் வைத்து, பெட்டியைப் பூட்டவும் செய்தாள். (தொடரும்)



''இந்தியன் சயின்ஸ் மானிட்டர்'' பத்திரிகைக்கு பின்வருமாறு ஒரு கடிதம் வந்தது:
''அன்புள்ள ஐயா! நான் ஓராண்டுக்கு முன் தங்கள் பத்திரிகைக்குப் பணம் செலுத்தினேன். ஓராண்டு முடிவில் எனக்கு மன நிறைவு ஏற்படா விட்டால் என் பணத்தைத் திருப்பி அனுப்பி விடுவதாக அப்பொழுது நீங்கள் வாக்களித்திருந்தீர்கள். அப்படியே அதைத் திருப்பிப் பெற விரும்புகிறேன். ஆனால் சிறிது எண்ணிப் பார்த்தபொழுது உங்களுக்கு வீண் தொல்லை கொடுப்பானேன் என்று தோன்றுகிறது. ஆகவே அந்தத் தொகையை அடுத்த ஆண்டு சந்தாவுக்கு சரி செய்து கொள்ளுங்கள்!

-எஸ். என். ராஜாராம். ஆதாரம்: கதம்பம்

---

# காலமடி காலம்

நகைச்சுவைக் கதை மாதிரி தொடங்கி, மர்மக் கதையாகத் தடம் புரண்டு, சண்டைக் கதையாக வளர்ந்து, கடைசியில் சீரியஸ் கதையாக முடிகிறது. ஜெய்சங்கர்—கவிதா; தேங்காய் சீனிவாசன் — சச்சு; இந்தக் காதல் ஜோடிகளுக்கு இடைஞ்சலாக மூர்த்தி. இவர்கள் பெங்களூரிலிருந்து சென்னை வந்து ஓர் ஐந்து நட்சத்திர ஹோட்டலில் தங்குகிறார்கள். ரங்கதுரை என்ற ஒரு பணக்காரன் வியாபாரத்தில் நஷ்டம் ஏற்பட்டு விட்டதனால் தான் இறந்து விட்டதாகக் கதை கட்டி விட்டுத் தலைமறைவாயிருக்கிறான். அந்த ரங்கதுரையைப் பற்றிக் கதாசிரியர் எதுவும் சரியாய்ச் சொல்லவில்லை.



கவிதா பலவித மான உடைகளில் தோன்றி ஜெய்சங்கருடன் காதல் களியாட்டம் போடுகிறார். அவர் நடிப்பு அதோடு சரி.

தேங்காய் சீனிவாசனும், சச்சுவும் இல்லையென்றால் இந்தப் படத்தை முழுவதும் உட்கார்ந்து பார்க்க முடியாது.

வி. கே. ராமசாமி பாகவதராக வந்து கச்சேரி செய்யும்போது கொட்டகையில் சற்றுக் கலகலப்பு ஏற்படுகிறது. கைக்கட்டைகளின் உதவியால் நடக்கும் ஊனமுற்ற வில்லனாக வரும் கோபியின் நடிப்பில் சிறிதும் ஊனமில்லை.

ஒரு கிறிஸ்தவப் பெண்ணின் பாழ் நெற்றியைப் பார்த்து அவள் ஒரு விதவை என்று தீர்மானித்து அவளுடன் அசட்டுப் பிசட்டென்று மூர்த்தி பேசிப் பழகுவது ரசிக்கும்படியாயில்லையே!

அநுபவம் மிக்க நல்ல நடிகரான ஜெய்சங்கர் இந்த மாதிரி படங்களில் நடிக்காமல் இருப்பது 'ஜெய்'க்கும் நல்லது; 'சங்கரு'க்கும் நல்லது!

நவராத்திரி கொலுவில் வைக்கும் செட்டியார் பொம்மை மாதிரி பெரிய நாமத்தோடு அசோகன் காட்டுக் கத்துக் கத்திப் பயங்கரமாகச் சிரிக்கிறார். இதில் என்ன ஹாஸ்யம் இருக்கிறதோ, தெரியவில்லை.

ஒரு வெற்றுக் காகிதத்தில் கையெழுத்து வாங்கிக் கொண்டு இரண்டு லட்ச ரூபாய்க்குப் பதிலாக ஆறு லட்சம் ரூபாயென்று திருத்தி மோசம் செய்வதாக ஒரு நிகழ்ச்சி வருகிறது. கையெழுத்துப் போட்டிருப்பவர் பெரிய மனிதர் — இரண்டு லட்ச ரூபாய் கடன் வாங்கக் கூடிய அளவுக்கு அந்தஸ்து உள்ளவர்! இப்படியெல்லாம் கண்ணுபின்னுவென்று கதை கட்டலாமா? படம் பார்ப்பவர்களை இப்படிப் பழி வாங்க அவர்கள் என்ன செய்தார்கள்?

கதை, வசனம், டைரக்‌ஷன் ஆகிய பொறுப்புக்களை ஏற்றிருப்பவர் — பாவம், கோபு! என்ன செய்யலாம்! எல்லாம் ''காலமடி காலம்!''

—காந்தன்

# தமிழ்நாட்டில் பெருகிவரும்



இந்தியாவில் தொழில்துறை வளர்ச்சி பெற்ற மாநிலங்களின் வரிசையில் தமிழ்நாடு மூன்றாவது இடம் வகிக்கிறது. தமிழ்நாட்டின் தொழில் வளர்ச்சி முன்பெல்லாம் ஆண்டுக்கு சராசரி 6½% ஆக இருந்து வந்தது. ஆனால் 1969-70-ல் 6% ஆக இருந்த தொழில் வளர்ச்சி வீதம் 1973-ல்—3.9% ஆக வீழ்ச்சி அடைந்தது. 1975-ஆம் ஆண்டில் இவ் வீழ்ச்சி -0·1% ஆக இருந்தது. தொழிலாளர்—நிர்வாகத்தினர் உறவும் மோசமடைந்தது. தமிழ்நாட்டில் புதிதாக முதலீடு செய்யத் தயக்கம் காட்டப்பட்டது. மின்சாரத் தேவையை நிறைவு செய்வது ஒரு பிரச்னையாயிற்று. மூலப் பொருள்களின் பற்றாக்குறை நிலவியது. பணவீக்கமும் மற்றொரு பிரச்னையாக அமைந்தது. இவற்றால் அடிப்படைப் பொருள்கள், நுகர் பொருள்கள் ஆகியவற்றின் தேவைகளில் மந்த நிலை ஏற்பட்டது. இத்தகைய சூழ்நிலையில், முற்றிலும் மாறுபட்ட துணிச்சலான தீர்வு ஒன்றை விரைவாகக் காண வேண்டியிருந்தது.

மின்சாரம்



நிதி

**1976—ல் இவற்றுக்கான தீர்வு காணப்பட்டது.**

புதிய புதிய சீர்திருத்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.
அவற்றின் விளைவாக—
தொழில் வளம் மீண்டும் தழைக்கத் தொடங்கிற்று.

ஒன்பதே மாதங்களில் தொழில் துறை 12% வளர்ச்சியைக் கண்டது. தொழிலாளர்—நிர்வாகத்தினருக்கிடையே நல்லுறவுகள் அமைந்தன. மின் உற்பத்தியும் விநியோகமும் சீர்பட்டன.

தமிழ்நாடு தொழில் வளர்ச்சிக் கழகம், தமிழ்நாடு சிறு தொழில் ஊக்கக் கழகம், தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகம், சிறு தொழில் வளர்ச்சிக் கழகம் ஆகிய அரசு நிறுவனங்களின் மூலமாக போதுமான அளவிற்குக் கூடுதல் நிதியுதவி வழங்கப்பட்டது. சிறந்த நிருவாகங்கள் இந்த வசதியைப் பயன்படுத்தித் தொழில் வளம் கண்டன.

**இப்போது தமிழ் நாட்டின் தொழில்துறை புதிய எழுச்சியையும், வளர்ச்சியையும் கண்டுள்ளது.**

ஓரே ஆண்டில் தமிழ்நாட்டின் தொழில்துறை பல வளர்ச்சிப் படிகளைக் கடந்து முன்னேறியுள்ளது.

- ஓசூர், இராணிப்பேட்டையில் தொழிற்பேட்டைகள் விரைந்து பெருகலாயின.
- தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகம் 324 தொழில் பிரிவுகளுக்கு 11.32 கோடி ரூபாய் அளவுக்கு உதவியளித்துள்ளது.
- பின்தங்கிய பகுதிகளில் அமைக்கப்பட்ட 194 தொழில் பிரிவுகளுக்கு 463 இலட்சம் ரூபாய் கடன் வழங்கப்பட்டுள்ளது.
- 30 தொழில் நுட்ப வல்லுநர்கள் ரூ. 38 இலட்சம் கடன் பெற்றுள்ளனர்.
- தமிழ்நாடு தொழில் வளர்ச்சிக் கழகம் ரூ. 406 கோடி முதலீடு செய்து 18,000 பேருக்கு வேலை வாய்ப்பு அளிக்கும் 40 திட்டங்களுக்கு ஆதரவளித்துள்ளது.

# தொழில் வளர்ச்சி



- சிறு தொழில் வளர்ச்சிக் கழகம் 10,000 புதிய சிறு தொழில் பிரிவுகளைப் பதிவு செய்துள்ளது.
- 43 புதிய தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன.
- 103 புதிய நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டு, அதன் மூலம் இயங்காமல் கிடந்த 5400 தறிகள் மீண்டும் இயங்கத் தொடங்கின.
- ரூ. 2 கோடி செலவில் தீவிர கைத்தறி மேம்பாட்டுத் திட்டங்கள் இரண்டும், ஏற்றுமதிப் பெருக்குத் திட்டம் ஒன்றும் செயற்படுத்தப்பட்டன.
- உரிமம் பெற்ற பல தொழிற்சாலைகள் உற்பத்தியைத் தொடங்கிவிட்டன.
- வறட்சியாலும் வெள்ளத்தாலும் ஏற்பட்ட இன்னல்களைப் போக்க தொழில் மேம்பாடு பெரிதும் உதவியது. மக்கள் தொகைக் கட்டுப்பாடு, மரங்கள் நடுதல், கிராமங்களை எல்லா வகையிலும் மேம்படுத்துவதற்கான வளர்ச்சிக்குப் பொறுப்பேற்றல், ஆகியவற்றிற்கும் தொழில் வளர்ச்சி பெரிதும் உதவியுள்ளது.

தமிழ்நாட்டின் தொழில்துறையில் புதிய மாற்றங்களை ஏற்படுத்தவிருக்கின்ற திட்டங்கள் வருமாறு:—

- அரியலூரில் புதியதோர் சிமிட்டி ஆலை
- சிமிட்டி உற்பத்தியில் அரிய சாதனை
- உடனடியாகச் செயல்படவிருக்கும் மூன்று புதிய சர்க்கரை ஆலைகள்; அதனையடுத்து அமைக்கவிருக்கின்ற மேலும் ஐந்து ஆலைகள்
- சர்க்கரை உற்பத்தி 3 இலட்சம் டன்னை எட்டும்.
- மின்னணுவியல் துறையின் மேம்பாட்டை விரைவுபடுத்துதல்.
- கோ-ஆப்டெக்ஸ் கைத்தறித் துணி விற்பனையை ரூ.18கோடியிலிருந்து ரூ. 25 கோடியாக உயர்த்துதல்.
- கூட்டுறவு நூற்பாலைகளில் கதிர்களின் எண்ணிக்கையை 2 இலட்சத்திலிருந்து 3இலட்சமாக உயர்த்துதல்.
- கைத்தறி நெசவாளர்களுக்கு உதவும் வகையில் நவீன சாயத்தொழிற்சாலைகள் அமைத்தல்.
- தோல்களைச் செம்மைப்படுத்தத் தகுந்த வசதிகள் அளிக்கப்படும். செம்மைப்படுத்தப்பட்ட தோல்களாலான பொருள்களைத் தயாரிப்பதில் தோல் தொழில் முழு மூச்சுடன் நடைபெறும்.
- உலக வங்கி அளிக்கும் நிதியுதவியுடன் கைவினைப் பொருள்கள் தயாரிப்புப் பயிற்சி அளிக்கவும், தயாரிக்கவும் ரூ.80இலட்சம் செலவில் 100 நிலையங்கள் அமைக்கப்படும்.

**தமிழ்நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு—**

**எழுச்சி மிகு புதிய இலட்சியங்கள்!**
**திறமை மிகு புதிய திட்டங்கள்!**
**ஏற்றமிகு புதிய கருவிகள்!**



பெர்லின் காட்சி



பாலக்காடு திரு ரகு



திரு சிவகுமார்

பெர்லின் முற்றுகை சரித்திரச் சம்பவம். இன்று கர்நாடக சங்கீதம் பெர்லினை முற்றுகை யிட்டு ஜெர்மானியரை வசப்படுத்துகிறது. பீதோவனின் இன்னிசையைக் கேட்டுப் பழகிப் போயிருக்கும் பெர்லின் நகர ரசிகப் பெருமக்களின் செவிகளில், தியாகய்யரின், தன்யாசியும் சாரங்காவும் வெள்ளமெனப் புகுந்து அவர்களைச் சொக்க வைத்திருக்கிறது!

# பெர்லின்  முற்றுகை!

பெர்லின் நகரத்தில் ஆண்டுதோறும்: பெரிய அளவில் அகில உலக ரீதியில் இசை விழா நடக்கிறது. International Institute of Comparative Music and Documentation என்ற நிறுவனம், உலகத்தின் பல பாகங்களி லிருந்து இசை வல்லுனர்களை அழைத்து ஒரு மாத காலத்துக்கு அமர்க்களமாக இசை விழாக் கொண்டாடுகிறது.



ஸ்ரீமதி பட்டம்மாள் ஈசுவரன்



ஸ்ரீ ஈசுவரன்



திரு டி. கே. ஜெயராமன்



இதுவரை வடநாட்டு வித்வான்கள்தாம் கலந்து கொண்டிருக்கிறார்கள். இந்த ஆண்டு முதல் தடவையாகக் கர்நாடக இசைக் கலைஞர்கள் கலந்து கொள்ள வேண்டுமென்று விரும்பி அழைப்பு விடுத்தார்கள். 'இந்தியா வாரம்' என்றே, மார்ச் மாதம் முதல்-வாரத்தை ஒதுக்கி விட்டார்கள்.

தமிழகத்தில் இந்த அழைப்பைப் பெற்று, பெர்லினுக்குப் பறந்து போய், அங்கே ரசிகர்களை மெய் மறக்கச் செய்தவர்கள் எல்லோருமே உயர்ந்த ரக இசைக் கலைஞர்கள்.

வாய்ப்பாட்டுக்காகத் திரு கே. வி. நாராயணசுவாமி, ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள், திரு டி. கே. ஜயராமன், வீணைக்காக திரு கே. எஸ். நாராயணசாமி, புல்லாங்குழலுக்காகத் திரு ரமணி, பக்கவாத்தியக்காரர்களாக, திருப்பாற்கடல் திரு வீரராகவன் (வயலின்) பாலக்காடு ரகு (மிருதங்கம்) திரு சிவகுமார் (மிருதங்கம்) அனந்தகிருஷ்ணன் (வயலின்) ஆகிய ஒன்பது பேர் — நவரத்தினங்கள் — இந்த மாத ஆரம்பத்தில் பெர்லினுக்குப் புறப்பட்டுச் சென்றார்கள்.

ஸ்ரீமதி பட்டம்மாள், ஜயராமன், சிவகுமார், அனந்தகிருஷ்ணன், திருப்பாற்கடல் வீரராகவன் ஆகிய இவருக்கும் மேற்கத்திய நாட்டுப் பிரயாணம் முதல் அனுபவம்.

திரு கே. வி. நாராயணசாமி. வீணை நாராயணசாமி, பாலக்காடு ரகு, புல்லாங்குழல் ரமணி- ஆகியோருக்கு இத்தகைய பிரயாணங்கள் சகஜமானவை. ஆனாலும் இவர்கள் பெர்லினுக்குப் போவது இதுதான் முதல் தடவை. எல்லோருமே, பெர்லின் திருவிழாவை முடித்துக் கொண்டு ஏனைய ஐரோப்பிய நாடுகளிலும் தங்கள் இனிய கலைத் திறனைக் காட்டிவிட்டுத்தான் தாயகம் திரும்புவார்கள்.

ஸ்ரீமதி பட்டம்மாள் குழு மாத்திரம் அமெரிக்க யாத்திரையை மேற்கொள்ளத் திட்டமிட்டிருக்கிறது.

ஸ்ரீமதி பட்டம்மாள், ஜயராமன், சிவகுமார், அனந்தகிருஷ்ணன் குழுவினர் பயணத்துக்கு ஜெர்மானிய நிறுவனத்துடன் பாரத சர்க்காரும் உதவ முன் வந்திருக்கிறது.

மார்ச் மாதம் நாலாம் தேதி பட்டம்மாள் ஜயராமன் குழுவினரும், 7ம் தேதி ரமணியும் 8ம் தேதி கே. வி. நாராயணசாமியும், 9ந் தேதி வீணை நாராயணசாமியும், தங்கள் இசைத் திறமையால் பெர்லினை முற்றுகை யிட்டு வெற்றி வாகை சூடியிருப்பார்கள்.

— பட்டினத்தார்



ஸ்ரீ கே. எஸ். நாராயணசாமி தம்பதி



திரு ரமணி



திரு கே. வி. நாராயணசாமி

திருப்பாற்கடல் திரு வீரராகவன்





திரு எ. அனந்தகிருஷ்ணன்





## வீட்டில் ஒரு வழக்கு

எ...ள் வீட்டில் ஒரு நாள் ஒரு பென்சிலுக்காக அக்கா தங்கை இருவருக்குமிடையே போர் மூண்டது.

விடுமுறையின் போது வெளியூர் சென்றிருந்த இருவருமே ஒரே மாதிரியான நீளப் பென்சில்கள் இரண்டு வாங்கி வந்தார்கள். பள்ளி திறக்கும் தினத்தில் இருவரும் தங்கள் பென்சிலைத் தேடும்போது ஒரே ஒரு பென்சில் தான் கிடைத்தது. இளையவள் கிடைத்த பென்சில் தன்னுடையதுதான் எனச் சாதித்தாள். மூத்தவளோ, பென்சில் தன்னுடையது'' என்று வாதாடினாள். இளையவள் அழ ஆரம்பித்து விட்டாள். எனக்கும் பென்சில் யாருடையதென்று புரியவில்லை. தங்கையின் அழுகையைக் கண்டு சிறிது மனம் இரங்கிப் பெரியவள், ''பென்சிலே ஆளுக்குப் பாதியாக வெட்டிக் கொடு'' எனக் கேட்டாள். அவள் சொல்வது நியாயமாகப் பட்டதால் அப்படியே செய்ய முற்பட்டேன்.

உடனே இளையவள் தன் அழுகையை நிறுத்தி விட்டு, ''அம்மா! உனக்கு சாலமன் மன்னரின் நீதிக் கதை தெரியுமல்லவா? அதில் குழந்தையை வெட்டு என்று சொல்பவள் ஒருத்தி. உண்மையிலேயே அவளா குழந்தைக்குத் தாய்? அக்கா பென்சிலே வெட்டு, வெட்டு என்று சொல்கிறாள். நான் பென்சிலே வெட்டக் கூடாது என்கிறேன். இதிலிருந்தே உண்மையில் பென்சில் யாருக்குச் சொந்தம் என்பது உனக்குத் தெரியவில்லையா?'' என ஆவேசமாகக் கேட்டாள்.

அவளுடைய சாமர்த்தியமான பேச்சில் வியந்து போய்ச் சிரித்து விட்டு ஒன்றும் பேசாது முழுப் பென்சிலே அவளிடம் கொடுத்துவிட்டு, வேறு ஒரு சிறு பென்சிலைத் தேடிப் பெரியவளிடம் கொடுத்துச் சமாதானப்படுத்தினேன். இன்று வரை அந்தப் பெரிய பென்சில் யாருடையதென்று எனக்குப் புரியவில்லை.

— ரா. திலகவதி

## மகளிர் பகுதி

காரட்டை நறுக்கும் போது அதன் அடிப்பாகத்தை எறிந்து விடாமல், உருண்டை வில்லையாக நறுக்கி, அந்த வில்லையைச் சிறிது தண்ணீருள்ள ஒரு தட்டில் மூழ்குமாறு வைக்கவும். இரண்டு அல்லது மூன்று நாட்களில் அது முளைவிடுவதைக் காணலாம். இம்மாதிரி நான்கு அல்லது ஐந்து வில்லைகளை முளைவிடச் செய்து, பார்ப்பதற்குக் கொத்தமல்லி இலைபோலத் தோன்றும் இவற்றை, தண்ணீர்த் தட்டுடன் வரவேற்பறையில் அலங்காரமாக வைக்கலாம். சற்றுப் பெரியதாக வளர்ந்ததும், பூஜாடிகளில் அடியில் தண்ணீர் ஊற்றி, வைக்கலாம். —சுந்தரி வைத்தியநாதன்

## சகஜ நிலைமை

ஒரு வழியாகத் திருமணச் சடங்குகள் முடிந்து தனித்து விடப்பட்ட அவனும் அவளும் ஒருவரையொருவர் பார்த்தபடி சில கண நேரம் பேசாதிருந்தனர். இறுதியில் அவன் தான் மௌனத்தைக் கலைத்தான்.

''விமலா....விமலா....'' என்று மெல்ல அவள் காதருகே கிசுகிசுத்தான். அவளோ பதிலே பேசவில்லை.

''விமலா....விமலா....'' என்று மீண்டும் அழைத்தபடி அவளருகே நெருங்கியமர்ந்து அவன் அசடு வழியவும், ஒருவழியாக அவளும் வாயைத் திறந்து ''என்னவாம்?'' என்று கேட்கவும், இருவரிடையே 'சகஜ பாவம்' மெள்ள எட்டிப் பார்த்தது.

''விமலா ... எங்கப்பா. ... உங்ககிட்டே. எனக்கு நானூறு ரூபாய் சம்பளம்னுதானே... சொன்னாங்க..... அது அவ்வளவும் பொய். எனக்கு இருநூறுதான் சம்பளம்....'' என்று இழுத்தான் அவன். அவளும் தன் பங்குக்கு, ''எங்க அம்மா மட்டுமென்ன, நாற்பது சவரன் போடுவதாகச் சொல்லி இருபது சவரன்தான் போட்டிருக்காங்க'' என்று கூறினாள். அவர்களிடையே மேலும் சகஜ நிலை பரவியது.

''தப்பு .... தப்பு.... இருநூறு ரூபாய்கூட என் சம்பளம் இல்லே. எனக்கு வேலையே இல்லே.....'' என்றான் அவன்.

''எங்க அம்மா மட்டுமென்ன. இருபது சவரனும் வெறும் 'கில்ட்டு'தான் போட்டிருக்காங்க'' என்றாள் அவள்.

''இன்னொன்றும் இருக்கு. அதை எங்கப்பா சொல்லியிருக்க மாட்டாங்க'' என்று 'அவன்' மீண்டும் அசடு வழிய இழுத்தான்.

அவளோ ''ஏன் இப்படிப் பைத்தியம் மாதிரி இழுத்து இழுத்துப் பேசி விழிக்கிறீங்க?'' என்றாள்.

''ஐயோ. அது உனக்குத் தெரியுமா? அப்பா சொல்லிட்டாங்களா?'' என்று அவன் அலறினான்.

அவள் சாந்தமாக, ''உங்க அப்பா சொல்லணுமா? எனக்கே தெரியும்! நானே பார்த்தேனே'' என்றாள்.

''உனக்கே தெரியுமா? நீ அங்கே அப்போ நர்ஸா இருந்தாயா?'' என்று இவன் கேட்டான்.

அவளோ நிதானமாக, ''அதெல்லாம் இல்லே; நானும் உங்களைப் போலத்தான்'' என்று வெட்கத்துடன் கூறி முடித்தாள். சகஜ நிலைமை முழுமை பெற்றது!

—'கிருஷ்ணா'





இட்டிலிக்கும் தோசைக்கும் உளுந்து அரைக்கும் போது வெண்டைக்காயில் கொஞ்சம் நறுக்கிப் போட்டு அரைத்தால் இட்லி, தோசை பூப் போல இருக்கும்! வெண்டைக்காய் சேர்த்தால் உளுத்தம்பருப்பு வழக்கமாகப் போடும் அளவில் ஓரளவு குறைத்துப் போட வேண்டும். இதனால் பருப்பு காரணமாக உடம்புக்கு ஏற்படும் வாயு உபத்திரவங்கள் குறையும். மேலும் வெண்டைக்காயில் உள்ள சத்து உடலுக்கு நன்மை தரும்.

— ம. க. சரஸ்வதி

# கதை சொல்லும் விரதம்!

பெண்கள், தங்கள் கணவன் நீண்ட ஆயுளுடன் இருக்க, நோற்கும் நோன்புகள் பல. இவற்றில் தென்னகத்தில் முக்கியமானது காரடையான் நோன்பு. வட இந்தியாவிலும் பெண்களுக்கு இத்தகைய ஒரு நோன்பு உண்டு.

நவநாகரிகச் சின்னமாக விளங்கும் என் தோழி கூட ஒருநாள் காலையில் அரைத்த மருதோன்றியைக் கொடுத்து, ''இதைக் கையில் இட்டுக் கொள், சாயந்திரம் வீட்டுக்கு வா; இன்று எங்களுக்கு கரவாசௌத்'' என்று சொல்லிச் சென்றாள்.

உத்தரப்பிரதேசம், பஞ்சாப் மாகாணங்களைச் சேர்ந்த கல்யாணமான பெண்கள் இந்நோன்பை அனுஷ்டிக்கிறார்கள். தீபாவளிக்குச் சுமார் பத்து தினங்களுக்கு முன்பு இந்நோன்பு வரும். நோன்பு கொண்டாடப் பெண்கள் அநேகமாகத் தங்கள் பிறந்த வீடு வந்து விடுகிறார்கள். விரத தினத்தன்று பெண்கள் அதிகாலையில் எழுந்திருந்து சூரியோதயத்துக்கு முன்பே இனிப்புப் பண்டங்களும், பழங்களும் சாப்பிட்டு விட வேண்டும். சூரியோதயத்திலிருந்து சந்திரோதயம் வரை அவர்கள் ஜலபானம் கூடச் செய்யக் கூடாது. தற்காலம் சிறிது தேநீர் அருந்துகிறார்கள். சாப்பிட்ட பின் தங்களை நன்றாக அலங்கரித்துக் கொள்வார்கள். கையில் மருதாணியும், வகிட்டு நுனியில் சிந்தூரும் கட்டாயம் அணிவார்கள். அன்று தையல், நிட்டிங், ராட்டை சுற்றுதல் முதலியன அவர்கள் செய்யக்கூடாது.

அன்று மாலை சந்திரோதயத்துக்கு முன் பெண்கள் வட்டமாக உட்கார்ந்து ஒரு பெண் கரவாசௌத்தின் மகிமை பற்றிய கதையைச் சொல்ல மற்றவர்கள் கேட்பார்கள். அப்பொழுது ஒவ்வொரு பெண்ணின் கையிலும், மூடிய தட்டில் அவளுடைய பிறந்த வீட்டார் கொடுத்த இனிப்புப் பண்டங்கள் இருக்கும். அவர்களுக்கு நடுவில் ஒரு செம்பில் தண்ணீர் வைத்துத் துணியால் மூடி, அதன் கழுத்தில் ஒரு சிவப்பு நூலைக் கட்டி யிருப்பார்கள். சிவப்பு நூல் மங்களத்துக்கு அறிகுறி. செம்பின் மீது ஒரு தட்டில் அரிசி, பாதாம் ஆகியன வைத்து, அவற்றின் மீது ஓர் அகல் விளக்கை ஏற்றி வைப்பார்கள். செம்பின் அருகில் பசும் சாணியால் ஒரு பொம்மை பிடித்து வைப்பார்கள்.

கதை சொல்பவள் சிறிது நிறுத்தும் பொழுது, ஒவ்வொரு பெண்ணும் தன் கையிலுள்ள தட்டைத் தனக்கு இடப் பக்கம் உள்ளவளிடம் கொடுப்பாள். பின் கதை தொடரும். இப்படியாகக் கதை முடியவும், தட்டுக்கள் பிரதட்சிணமாகச் சுற்றி அவரவர் தட்டு அவரவர் கைகளுக்கு வரவும் சரியாக இருக்கும். அதன்பின் அவர்கள் சந்திரோதயத்தை எதிர்பார்த்து ஆவலுடன் காத்திருப்பார்கள். சந்திரன் உதித்ததும், நடுவில் வைத்திருந்த பாத்திரத்து ஜலத்தை அர்க்கியமாகக் கொடுத்துவிட்டு, தட்டில் உள்ள பட்சணங்களைச் சந்திரனுக்கு அர்ப்பணிக்கிறார்கள். சந்திரனைச் சல்லடை வழியாகப் பார்த்துவிட்டு அதன் பின்தான் ஆகாரம் உட்கொள்ளுகிறார்கள். அன்றைய ஆகாரத்தில் முழுப்பயிறு இடம் பெற வேண்டும்.

அவர்கள் சொல்லும் கதை பின்வருமாறு: ஏழு அண்ணன்களுக்கு ஒரு தங்கை. அவள் ஒரு ராஜகுமாரனை மணக்கிறாள். கரவாசௌத் நோன்பு நோற்கப் பிறந்தகம் வருகிறாள். சகோதரர்கள் அவளுக்கு நிறைய இனிப்புப் பண்டங்களும் பழங்களும் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்துச் சாப்பிடச் சொல்கிறார்கள். தங்கை, சந்திரனைப் பார்க்காமல் சாப்பிட மாட்டேன் என்று கூறி விடுகிறாள். அவள் பட்டினி கிடப்பதைக் காணச் சகியாத சகோதரர்கள், அவளைச் சாப்பிட வைக்கும் நோக்கத்துடன், தூரத்தில் ஒரு மரத்தின் மீது, அகல் விளக்கை ஏற்றி அதன் முன்பு ஒரு சல்லடையைத் தொங்க விட்டு விட்டுத் தங்கையிடம், ''சந்திரன் உதித்து விட்டான், வந்து பார்'' என்கிறார்கள். அவளும் அதை நம்பிச் சந்திரனுக்கு நிவேதனம் செய்து விட்டுச் சாப்பிடுகிறாள். அப்பொழுது அவள் கணவனுக்கு உடல் நலமில்லை என்று செய்தி வருகிறது. அதைக் கேட்ட சகோதரர்கள் பயந்துபோய் உண்மையைச் சொல்லி விடுகிறார்கள். அவளுக்கும் தான் தெரியாது செய்த தவறு புலனாகிறது. வருத்தத்துடன் மாமியாரின் இல்லம் சென்று, மயக்கமாக இருக்கும் கணவனை வைத்துக் காப்பாற்றி வருகிறாள். ஒரு வருடம் முடிந்த பின், அடுத்து வந்த கரவாசௌத் அன்று நோன்பிருந்து, பின் தன் கைச் சுண்டு விரலில் சிறிது காயமேற்படுத்தி அதிலிருந்து புறப்பட்ட ரத்தத்தைக் கணவன் மேல் தெளிக்க அவன் சுய நினைவு பெற்று எழுந்து விடுகிறான்.

—ஆண்டாள்





# நிலமற்ற ஏழையர்க்கு நல்வாழ்வு !



**பேச்சுக்கள் மட்டுமல்ல, செயல்களே சாற்றிடும் சாதனைகள் :**

தமிழ்நாடு அரசின் மிகச் சிறப்பு வாய்ந்த திட்டங்களில் ஒன்று, நிலமற்ற ஏழையர்க்கு நிலம் வழங்குதலாகும். கடந்த ஓராண்டில் இவ்வகையில் பெரும் முன்னேற்றம் ஏற்பட்டு, உருப்படியான காரியங்கள் பல நிறைவேறியுள்ளன



குடிசைப்பகுதிகளில்
குடிநீர் வழங்குதல்



தெரு விளக்குகள்



நல்ல சுகாதார வசதிகள்



கிராமக் கைவினைஞர்களுக்கு
நிலம்

## மனைச் சொந்தக்காரர்களின் தயவு இனித் தேவை இல்லை!

1976 நவம்பர் மாதத்தில் தமிழ்நாடு அரசு, குடிசைப் பகுதி விரைவு மேம்பாட்டுத்திட்டம் ஒன்றை செயல் படுத்தத் தொடங்கியுள்ளது. சென்னை, திருச்சி, மதுரை, கோவை ஆகிய நகரங்களில் வசிக்கும் குடிசைவாழ் மக்களுக்குக் குடி தண்ணீர் வழங்குதல், தெரு விளக்கு அமைத்தல், சுகாதார வசதிகள் செய்து கொடுத்தல் போன்ற அடிப்படை வசதிகளை வழங்குவதே இவ்விரைவுத் திட்டத்தின் நோக்கம். ரூ. 5 கோடி செலவில், 88,225 குடும்பங்களைக் கொண்ட 694 குடிசைப் பகுதிகளில் இத்திட்டம் செயல்படும். நடப்பு ஆண்டில், இத் திட்டத்தின் கீழ் இதுவரை ரூ. 75 இலட்சம் செலவிடப்பட்டுள்ளது.

## வசதிகளை வழங்கிட தமிழ்நாடு அரசும், உலக வங்கியும் இணைந்து செயல்படுகின்றன:

சென்னைப் பெருநகர் பகுதியில் அமைந்துள்ள 87 குடிசைப் பகுதிகளின் மேம்பாட்டுக்காக, உலக வங்கி ரூ. 4.5 கோடி அளிக்கிறது. இது மட்டுமல்ல, 20 ஆண்டு தவணை முறையில் குடிசை வாழ் மக்களுக்குப் பட்டாக்களும் இத் திட்டத்தின் கீழ் வழங்கப்படும்.

கடந்த ஆண்டு குடிசைப்பகுதி சீரமைப்பு வேலை துரிதப்படுத்தப்பட்டது. ரூ. 266.66 இலட்சம் செலவில், 2416 குடியிருப்பு விடுதிகள் கட்டப் பட்டன. ரூ. 336.49 இலட்சம் செலவில் மேலும் 4380 குடியிருப்பு விடுதிகளை கட்டும் வேலை இப்போது நடைபெற்று வருகிறது.

## கிராமமோ, நகரமோ எங்கிருந்தாலும் நிலமற்றோர்க்கு வீட்டு மனைகள் வழங்குவதே குறிக்கோள்:

கிராமப்பகுதிகளில் உள்ள நிலமற்ற ஏழைகளுக்கும் நல்வாழ்வுக்கு வகை செய்யப்படுகிறது. 1976ம் ஆண்டில் 1,55,171 வீட்டு மனைப் பட்டாக்கள் வழங்கப்பட்டன. இதில், 37,280 பட்டாக்கள் அரிசனங்களுக்கும் 2046 பட்டாக்கள் பழங்குடியினருக்கும் அளிக்கப்பட்டன.

விவசாயிகள் மற்றும் விவசாயத் தொழிலாளர் வசிக்கும் எல்லாக் குடியிருப்புகளையும் (வீட்டு மனைகள்) அவர்களுக்கு உடைமையாக்கும் திட்டம் தீவிரமாகச் செயல்படுத்தப்படுகிறது. 1,75,224 குடியிருப்புப்பட்டாக்கள் வழங்கப்பட்டுள்ளன. தச்சர், கருமார் போன்ற கிராமக் கைவினைஞர்கள் வசிக்கும் குடியிருப்பு நிலங்களின் உரிமைகளை அவர்களுக்கே வழங்கிடும் வகையில் 1976 நவம்பர் மாதத்தில் தமிழ்நாடு அரசு, ஓர் சட்டத்தை இயற்றியுள்ளது. இந்தச் சட்டத்தின் கீழ், 15,000 கிராமக் கைவினைஞர்களுக்கு வீட்டுமனை நிலம் உரிமையாகும்.

***நிறைவு தரும் சாதனை தான்!
ஆனால் நிறைவேற்றப்பட
வேண்டியவை நிறைய உள!***

MOULIS/DIPR 7072/77-6

"சாருக்கு இன்னிக்கு 'லாஸ்ட் டே'யாக்கும்?"

சிவசங்கரனின் கேள்வி சோமநாதனின் மனத்தில் சுரீர் என்று தைத்தது.

'சாருக்கு இன்னிக்கு 'லாஸ்ட் டே'யாக்கும்?' — என்ன அசட்டுத்தனமான கேள்வி? வாழ்க்கையிலேயே இன்று கடைசி நாள் என்று தொனிக்கும் முறையிலல்லவா கேட்டு விட்டான்?.... மடையன்! பேசத் தெரிந்த லட்சணம்!

'சிவசங்கரன்! இன்று என் உத்தியோக வாழ்க்கையில் கடைசி நாள்! நாளை முதல் நான் ஒரு சுதந்திரப் பறவை. சாருக்கு இன்னிக்கு 'லாஸ்ட் டிபார்ட்மெண்டல் டே'யாக்கும் என்று நீ கேட்டிருக்க வேண்டும்' — இப்படி விளக்கம் கொடுத்து அனுப்ப நினைத்தார்.

ஆனால் அவர் அப்படி ஒன்றும் சொல்லவில்லை. சிவசங்கரனுக்கு அவ்வளவு தூரம் புரிந்து கொள்ளும் திறமையில்லை என்று அவருக்கு அனுபவ பூர்வமாகத் தெரியும். ஆகவே சிரமப்பட்டு ஒரு புன்சிரிப்பை வரவழைத்துக் கொண்டு 'எஸ்! எஸ்!' என்று தலையை ஆட்டிவிட்டுத் தம் வேலையில் மூழ்கினார். ஆனால் மனம் குமுறியது.

உத்தியோகத்திலிருந்து ஒய்வு பெறுவது என்பதை ஒரு பெரிய விஷயமாக ஒருநாளுமே சோமநாதன் சிந்தித்துப் பார்த்ததில்லை. என்றைக்கு உத்தியோகத்தில் சேர்ந்தோமோ அன்றைக்கே இதிலிருந்து ஒருநாள் ஒய்வு




கோமதி ஸ்வாமிநாதன்



பெறத்தானே வேண்டும், என்ற நினைவையும் ஒரு பக்கமாகப் போட்டு வைத்திருந்தார்.

ஆனால் ஒரு விஷயம் அவருக்குப் பாதகமாகவே இருந்தது. அது அவருடைய தோற்றம். உடை, அணியும் முறை. அவரைப் பார்க்கும் யாருமே அவர் வயதை நாற்பத்தி ஐந்துக்கு மேல் மதிக்க மாட்டார்கள்! அவருடைய உடல் கட்டுக்கு அவருடைய ஆகாரக் கட்டுப்பாடு நியதிகள்தாம் காரணம் என்று பலருக்குத் தெரியாது.

சிறிது நேரம் தொடர்ந்து கையிலிருந்த பைலில் சிரமப்பட்டுக் கவனத்தைச் செலுத்தினார். முன்னால் ஆள் அரவம் கேட்டது. மீண்டும் தலையை நிமிர்ந்து பார்த்தார். தாயுமானவர் நின்று கொண்டிருந்தார்.

"வணக்கம்! ஐயாவுக்கு இன்றைக்குக் கடைசி நாள்!" தாயுமானவர் தூய தமிழ்ப் பிரியர் — இல்லை, இல்லை; அன்பர்.

சோமநாதனுக்குத் தூக்கி வாரிப் போட்டது! இது எச்சரிக்கைக் குரலா? பாராட்டுக் குரலா? விடை கொடுக்கும் குரலா? புரியவில்லை. கணப்பொழுதில் அவர் சமாளித்துக் கொண்டார்.

"உட்காருங்கள் மிஸ்டர் தாயுமானவர்— ஐ ஆம் சாரி! மிஸ்டருக்குத் தமிழ் என்ன?" என்று மேஜைக்கு அப்பால் காலியாக இருந்த நாற்காலியைக் காட்டினார் சோமநாதன். தாயுமானவர் உட்காரத் தம்மைத் தயார் செய்து கொண்ட நேரத்தில், சோமநாதன், சிவசங்கரனிடம் கொடுக்க நினைத்த விளக்கத்தை இப்போது கொடுத்தாக வேண்டும் என்ற முடிவுக்கு வந்து விட்டார்.

"நான் இன்றைக்கு உத்தியோகத்திலிருந்து ரிடையர் ஆகிறேன். அதைத்தானே நீங்கள் குறிப்பிடுகிறீர்கள்?" என்று நிதானமாகக் கேட்டார் சோமநாதன்.

"ஆம் ஐயா! நான் அதை நினைவில் கொண்டு தான் கேட்க வந்தேன். ஐயா போன்ற அதிகாரியை இனி இந்தக் காரியாலயம்....."

மேலும் தாயுமானவர் தொடர்வதற்குள் அவசரம் அவசரமாகச் சோமநாதன் வலது உள்ளங்கையைத் தூக்கிக் காட்டி ஒரு நீண்ட சொற்பொழிவைக் கேட்கும் உபாதையிலிருந்து தப்பினார். இல்லாவிடில் தாயுமானவர் தான் தனி நபராகவே வரவேற்பிலிருந்து, தலைமை உரை, தனி உரை வழியாக, நன்றியுரை வரை வந்து விடுவார். எங்கும் எதற்கும் சுருக்கமாகப் பேச அவருக்குத் தெரியாது. அப்படிச் செய்தால் தனக்குப் 'பப்ளிசிடி' கிடைக்காது என்று அவருக்குத் தெரியும்.

"தாயுமானவர்! 'இன்றைக்கு நீங்கள் ஒய்வு பெறும் நாளல்லவா?' என்று நீங்கள் என்னைக் கேட்டிருக்க வேண்டும்! 'ஐயாவுக்கு




இன்றைக்குக் கடைசி நாள்' என்று சொல்வது, ஏதோ குரோதபுத்தியுள்ள குடுகுடுப்பாண்டி சொல்வது போலவோ, அல்லது நாடி பார்க்கும் பழைய காலத்து வைத்தியர்கள் நோயாளியைப் பார்த்துச் சொல்வது போலவோ இருக்கிறது. நான் சிறிது காலம், கவலையில்லாமல் 'பென்ஷன் வாங்குவதில் உங்களுக்கு ஒன்றும் ஆட்சேபணை இல்லையே?'' என்றார் சோமநாதன் உதடுகளில் புன்னகை படர! இதை விடத் தாயுமானவரைக் குத்துவதற்குக் கூர்மையான கத்தி கிடையாது என்று அவருக்குத் தெரியும். சிரித்துக் கொண்டேதான் குத்தினார்! அது சோமநாதனுக்குக் கைவந்த கலை.

தாயுமானவரின் முகத்தில் அசடு வழிந்தது. தம் நிலையைப் புரிந்து கொண்டு ''மன்னிக்க வேண்டும்! நான் அப்படிக் கேட்டிருக்கக் கூடாதுதான். ஐயா நீடூழி வாழவும் பணியாற்றிய நாட்களை விட நீண்ட நான் ஓய்வு ஊதியம் 'பெறவும் இறைவன் அருள் பாலிக்க வேண்டும் என்று வேண்டுகிறேன்'' என்று கூறிச் சுருக்கமாக நன்றியுரையை முடித்து அவையினரின் பாராட்டினைப் பெற்று விட்ட பெருமிதத்தோடு புறப்பட்டு விட்டார்.

சோமநாதனுக்கு உள்ளூறச் சிரிப்பு. ஆனாலும் அந்த நிலை அதிக நேரம் மனத்தில் நீடிக்கவில்லை. மீண்டும் குழப்பம் சூழ்ந்து கொண்டது.

'தாயுமானவரின் நாக்கில் சனீஸ்வரன் இருப்பாரோ? ஹூம்!... இன்று மாலை வீட்டுக்குப் போகும் போது கொஞ்சம் கவனமாகப் பிளாட்பாரத்து ஓரத்தில் நடக்க வேண்டும். பஸ்ஸில் அவசரப்பட்டு ஏறக் கூடாது!... கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்' என்றெல்லாம் நினைத்து மனத்தைக் குழப்பிக் கொண்டார். ஸ்கந்த சஷ்டி கவசத்தில் சில பகுதிகள்தான் அவருக்குத் தெரியும். அதை இரண்டு மூன்று தடவைகள் மனத்துக்குள் சொல்லிக் 'கொண்டார். மீண்டும், சிவசங்கரனையும், தாயுமானவரையும் மறந்து வேலையில் ஈடுபட்டார். மாலையில் காப்பி வரவழைத்துச் சாப்பிடக் கூட அவருக்கு நினைவு இல்லை.

பிற்பகல் நாலே முக்கால் மணி இருக்கும். பரந்தாமன் கையில் ஒரு சிறு துணிப்பையுடன் சோமநாதன் முன் வந்து நின்றான். பரந்தாமன் துடிதுடிப்பு நிறைந்த இளைஞன். கடைநிலை ஊழியனாகச் சேர்ந்து எழுத்தர் பதவிக்கு வந்தவன். வேலையை நன்கு கற்றுக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் உள்ளவன். எந்த வேலையையும் முகம் சுளிக்காமல் செய்ய விரும்புபவன். சோமநாதனே அவனைப் பல தடவைகள் உற்சாகப்படுத்தியிருக்கிறார்.

பரந்தாமன் உணர்ச்சி வசப்பட்டிருந்தான். அவனால் பேசமுடியவில்லை. கையிலிருந்த பையிலிருந்து ரோஜாப்பூ மாலையை எடுத்தான்.

சோமநாதன் என்ன நினைத்துக் கொண்டாரோ! சட்டென்று இருக்கையிலிருந்து எழுந்து பரந்தாமனின் கைகளைப் பிடித்துக் கொண்டார். ''பரந்தாமன்! நீ இதற்கெல்லாம் காசைச் செலவழித்திருக்கக் கூடாது! உன் குழந்தைக்கு ஒரு பிஸ்கட் பாக்கெட் வாங்கிக் கொண்டு போய்க் கொடுத்திருக்கலாம்'' என்றார்.

''சார்!... உங்களை மாதிரிச் சிரித்தபடியே வேலை சொல்லித் தர....'' பரந்தாமனை மேலே பேச விடாமல் சோமநாதன் குறுக்கிட்டார்.

''பரந்தாமன்! எதிலுமே ஓர் இனிமையைக் காண ஆரம்பிச்சுட்டோம்னா, வாழ்க்

## ஸ்ரீ மல்லிகேஸ்வரர் கும்பாபிஷேகம்

சென்னை லிங்கிச் செட்டித் தெருவில் ஸ்ரீ மரகதாம்பிகையுடன் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மல்லிகேசுவரர் ஆலயம் பழம் பெருமை வாய்ந்தது. இக் கோயிலுக்குத் திருப்பணி செய்து ஸ்ரீ மரகதாம்பிகா-சமேத மல்லிகேசு வரருக்கு 4-4-77 அன்று வெகு விமரிசை யாக அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் நடக்க ஏற்பாடு ஆகியுள்ளது. இப்பெரும் பணியில் பங்கு கொண்டு பொருள் அனுப்பி இறையருளைப் பெற விரும்புபவர்கள் அணுக வேண்டிய முகவரி: செயலாளர், கும்பாபி ஷேகக் குழு, ஸ்ரீ மல்லிகேசுவரர் தேவஸ் தானம், 194, லிங்கிச் செட்டித் தெரு, சென்னை-600001.



கையிலே எந்தக் கஷ்டங்களையும் நாமே கனமில்லாமல் தாங்கிக்கலாம்!... நான் எதையுமே லகுவாக, நிறைவாக எடுத்துக்கொள்கிறேன் என்றால், அதற்குக் காரணம் என் பள்ளி நாட்களிலேயே நான் மனத்தில் பதித்துக் கொண்ட ஒருவிதக் கவர்ச்சியான பொக்கைவாய்ச் சிரிப்பைக் காட்டும் படம். அந்தச் சிரிப்பின் உடைமையாளர் மகாத்மா காந்தி. அதோ! இந்த அறையில் அவர் படத்தையும் நான் வாங்கி வைத்திருக்கிறேன். அந்த மாலையை அவருடைய படத்துக்குப் போடு. எனக்கு நீ ஆயிரம் மாலைகள் போட்டதற்குச் சமம்'' என்றார்.

பரந்தாமனின் கண்களில் நீர் பொங்கியது. மாலையைக் காந்திஜியின் படத்துக்குப் போட்டான். வழிந்த கண்ணீர் வழியாகச் சோமநாதனைப் பார்த்துக் கொண்டே வெளியில் சென்றான். சோமநாதன் இப்போது ஒருவிதப் பெருமூச்சு விட்டார். மனத்தில் திருப்தி நிலவியது.

ஐந்து மணி அடித்ததும் சந்தடியில்லாமல் தம் பொறுப்பிலிருந்த அலமாரிச் சாவியை உரியவரிடம் சேர்ப்பிக்கும்படி அனுப்பி விட்டுக் கைப் பையைத் தூக்கிக் கொண்டு கிளம்பினார். சம்பிரதாயமாக, ஓய்வு பெறுபவர்கள் அந்தத் தினத்தில் எல்லோரிடமும் போய்க் கைகுலுக்கிவிட்டு விடைபெற்றுக் கிளம்புவார்கள். சோமநாதன் ஒருவிதத் தீர்மானத்துடன், அந்தச் சம்பிரதாயத்தை மீறினார். பிரிவு, ஓய்வு என்ற விஷயங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து விளம்பரப்படுத்துவதைத் தவிர்க்க முனைந்தார்.

அப்போதுதான் காப்பி சாப்பிடாதது நினைவுக்கு வந்தது. பக்கத்திலிருந்த ஹோட்டலுக்குப் போகலாம்! ஆனால் அங்கேயும் யாராவது தெரிந்த காரியாலயச் சிப்பந்தி வந்து, 'சாருக்கு லாஸ்ட் டேயா?' என்றால், பரந்தாமன் தம் மனத்தில் உருவாக்கிய அத்தனை நிறைவும் கரைந்து போய்விடுமே!

எப்படியும் இந்தே முக்கால் மணிக்குள் வீட்டுக்குப் போய்க் காப்பி குடித்துக்கொள்ளலாம் என்ற நினைவில் பஸ் ஸ்டாப்பை நோக்கி நடந்தார். கவனமாகவே நடந்தார்.

வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்த ஐந்து வயதுப் பேரப் பயல், 'தாத்தா வந்துட்டார், தாத்தா வந்துட்டார்!' என்று கட்டியம் கூறிக் கொண்டே ஓடினான்.

சோமநாதன் பேரக் குழந்தையை அப்படியே அணைத்துத் தூக்கிக் கொண்டார்.

''ரிட்டயர்ட் தாத்தா வந்துட்டார்னு சொல்லுடா'' என்ற குரல் உள்ளே யிருந்து வந்தது. அது சோமநாதன் மனைவியின் குரல். அந்தக் குரலில் கடுமை இல்லை; இனிமை இருந்தது. தமக்கு ஓய்வு தேவை என்பதைத் தம் மனைவியும் உணர்கிறாள் என்று நினைத்தபோது சோமநாதனுக்கு ஒருவித ஆத்ம திருப்தி ஏற்பட்டது.

காப்பி வந்தது. அவசரம் அவசரமாகக் குடித்து விட்டுப் பையிலிருந்து ஓர் ஆங்கில நாவலை எடுத்தார். விட்ட இடத்திலிருந்து தொடர. அவர் மனைவி எதிரே நின்றாள்.

''நீ ஒன்றும் என்னை விசாரிக்க வேண்டாம்! நான் ரிட்டயராகி விட்டேன்!'' என்றார் சிரித்துக் கொண்டே.

''இது என்ன புது விஷயமா?... இனிமேல் நாளையிலிருந்து நீங்கதான் காலையிலே கறிகாய் வாங்கப் போகணுமாம்! உங்க பிள்ளை உத்தரவு போட்டாச்சு!'' என்றாள் அவள்.

சோமநாதன் ஒரு கணம் விழித்தார். பிறகு மடமடவென்று சிரித்தார். ''ரிட்டயர்ட் கிழம் ஆக்டிவாக இருக்க வழி சொல்றான் போலிருக்கு!...டேய் பயலே இங்கே வாடா!'' என்று பேரப் பயலைப் பக்கத்தில் கூப்பிட்டார். ''என்ன தாத்தா?'' என்று கேட்டுக்கொண்டே ஓடி வந்தான்.

''உங்க அப்பன் ஆபீஸிலிருந்து வருவான்! அவன் கிட்டே நீ கேட்கணும்! நீ எப்போ ரிட்டயராகப் போறேன்னு! கறிகாய் வாங்கப் போக உனக்கும் ஆள் வேணுமில்லையா? இந்தக் கேள்வியை இப்போ கேட்டுடாதே! இன்னும் இருபத்தி அஞ்சு வருஷம் கழிச்சுக் கேளு, என்ன?'' என்றார்.

தொடர்ந்து சோமநாதனும் அவருடைய மனைவியும் சேர்ந்து சிரித்த சிரிப்பு வீடெல்லாம் எதிரொலித்தது. விஷயம் புரியாமல் பேரப் பயல் மாத்திரம் விழித்தான்.

# சேரமான் காதலி

கண்ணதாசன்

அத்தியாயம் 16

## உயிரோடு கல்லறை

“எல்லாம் வல்ல தம்பிரான் சுவாமிகள் எழுதிக் குவிப்பதென்னவோ?'' என்றார் சேரமான்.

தலை நிமிர்ந்து பாராமலேயே, ''ஏடெழுதுவது என் வழக்கம்'' என்றார் தம்பிரான் சுவாமி.

''அந்த எழுத்து அரசாங்க எழுத்தா? என் தலையெழுத்தா?'' என்று கேட்டார் சேரமான்.

''தலையெழுத்தை நிர்ணயிக்கும்படி சர்வேசுவரன் என்னை அனுமதித்தால் அதையும் நான் செய்து காட்டுவேன்'' என்றார் நாராயண நம்பூதிரி.

''சலீமா எங்கேயென்று சொல்லலாமா?'' என்று கேட்டார் சேரமான். அவர் குரலில் ஒரு வகையான உறுதி இருந்தது.

''அவளைப் பற்றியே சிந்திப்பதுதான் என் வேலையா?'' என்று கேட்டார் நாராயண நம்பூதிரி.

சேரமான் இருந்த வேகத்தில், நம்பூதிரியுடன் நிதானமாக வாதிட அவர் தயாராக இல்லை. 'நிதானம் தவறினாலும் பலன் இல்லை' என்பது அவருக்குப் புரிந்தது.

'சலீமா மறைந்தது நம்பூதிரியின் ஏற்பாட்டிலேயே' என்று அவர் உறுதியாக நம்பினார். ஆனால் அதை அவரது வாய்மொழியாகப் பெறுவது எவ்வளவு கடினம் என்பதையும் சேரமான் நன்கு அறிவார்.

தான் நின்று பேசும்போது, தம்பிரான் சுவாமி, அமர்ந்தபடியே, தலை தூக்காமல் பேசுவதிலிருந்து, 'அவர் ஏதோ கண்டிப்பான முடிவில் இருக்கிறார்' என்பதையும் சேரமான் புரிந்து கொண்டார். அடுத்தொரு வார்த்தை பேசாமல் அங்கிருந்து வெளியேறினார் சேரமான்.

ஒரு மன்னவன் — மனிதர்களில்கூடக் கீழானவனுக்குக் காட்சி யளிப்பது போல் தோன்றிற்று. சேரமான் அதற்கும் வருந்தவில்லை. அவர் இதய பீடம், 'சலீமா, சலீமா' என்றே அடித்துக் கொண்டது.

சலீமா!

அவள் எங்கே போனாள்?'

அவள் சிறை வைக்கப்பட்ட அன்றே தரங்கிணி அவளிடம் வாதாடிப் பார்த்தாள், எச்சரித்துப் பார்த்தாள்.

ஆனால் அந்தக் காதல் கல்வெட்டு அழிய மறுத்தது:

முன்பே நாராயணநம்பூதிரி செய்திருந்த ஏற்பாட்டின்படி, இரவோடு இரவாகச் சலீமா கடத்தப்பட்டாள்.

உதயகிரி மலையே அவர்கள் திட்டமிட்டிருந்த இடம்.

இப்போது அந்த மலைக்குக் கயிறு இல்லாமல் ஏறக்கூடிய சாலைகள் போடப்பட்டு விட்டன.

மார்த்தாண்ட வர்மனுக்குத் தெரிவித்துவிட்டு, தளபதி அங்கதன் உதவியுடனேயே சலீமா உதயகிரிக்குக் கொண்டு செல்லப்பட்டாள்.

உதயகிரி மலைக்கு அவர்கள் வந்து சேர்ந்தபோது, உதயகிரி மன்னர்—தரங்கிணியின் சிறிய தந்தை மலையவேள் அவர்களை வரவேற்றார்.

சலீமா கண்ணீர்க் கடலாக இருந்தாள். அவளிடமிருந்து எந்தச் சம்மதத்தையும் பெற, தரங்கிணியால் முடியவில்லை.

நடந்த நிகழ்ச்சிகளைத் தன் சிறிய தந்தைக்கு விவரித்தாள் தரங்கிணி.

இப்போது சேர நாட்டைக் காக்கும் கடமை தனக்கு வாய்த்திருப்பதாகக் கூறினாள்.

உதயகிரி நாகர்கோவிலிலேயே சலீமாவைக் கொண்டு போய் வைத்தாள், தரங்கிணி.

நாகங்கள் மண்டியிடும் நாகர்கோயில் சலீமாவுக்குப் புதுமையாகவும் இல்லை; அச்சம் தரக் கூடியதாகவும் இல்லை.

''இதோ பார்! நடவாத ஒன்றுக்காக ஆவியை இழத்தல் அறிவுடைமையன்று.

நின்னைச் சேரநாடு ஒருகாலும் ஏற்றுக் கொள்ளாது. அரசியல் நெறிமுறை மன்னவரைத் திருத்தியே தீரும். காதல் என்பது ஆயிரமாயினும், கண்ணீர் என்பது ஆறெனஓடினும், நாடே திரண்டு நீதி சொல்லும்போது மரணமே முடிவாகிவிடும். 'முற்பிறப்பு' என்பதெல்லாம் கட்டுக்கதை. மன்னவர் அதை நம்பினும் மக்கள் அதை நம்பார். இவ்வுதயகிரியில் அவர் கைதியாக இருந்த காலையிலும், காவலராகத் தோன்றிய வேளையிலும் யான் என்னை உடன் பிறந்தாளாக வகுத்துக் கொண்டேனேயன்றி, ஒரு கணமும் ஆசையுணர்வு பெற்றிலேன். மாற்றார் தன் நாயகன் — அதிலும் மன்னவன்; வேற்றுச் சமயம்; விளையாத நிலத்தில் ஏன் விதை விதைத்தாய்? தண்ணீரின்றி உன் கண்ணீரிலேயே அது விளையுமாயின், அதற்குக் காவல் இருக்கவும் யான் கடவேன். ஆயின் இது ஏலா ஒன்று. இம்மலை மக்கள் யாவரும் மடிவதாயினும் மன்னவர் குலத்தைக் காப்பது எம் பணி. அறியாய் நீ? அறிவாய் ஒரு நாள்'' என்றாள் தரங்கிணி.

''நீங்கள் கல்லிலே நார் உரிக்கிறீர்கள். காற்றிலே விதை நடுகிறீர்கள்; கனிந்த கனியைக் காயாகச் சொல்கிறீர்கள். நான் அரச போகத்தை விரும்பி அவரை மணந்தவள் அல்ல; இது காலத்தின் ஆணை'' என்றாள் சலீமா.

தரங்கிணி பேசப் பேச அவளுக்கும் 'தொல்காப்பியத் தமிழ்' அறிமுகமாகிக் கொண்டிருந்தது.

மறுநாள் முழுவதும் தனக்கு அனுப்பப்பட்ட உணவு வகைகளைச் சலீமா தொட்டுக்கூடப் பார்க்கவில்லை.

நாகங்களின் சீறல் அவளுக்கு இசையாகவே இருந்தது.

தரங்கிணியும் வாளாவிருக்கவில்லை.

ஒவ்வொரு பெண்ணாக அனுப்பி, பயங்கரமான நிகழ்ச்சிகள் பலவற்றைச் சலீமாவிடம் கூறச் செய்தாள்.

ஒரு கட்டத்தில், தன் சிறிய தந்தையை அனுப்பி அச்சுறுத்தச் செய்தாள்.

'எதற்கும் சலீமா இசையவில்லை' என்று தெரிந்ததும், உதயகிரி மன்னரான தரங்கிணியின் சிறிய தந்தையும், அங்கு வந்து சேர்ந்த அங்கதனும் வேறொரு திட்டமிட்டார்கள்.

அந்தத் திட்டத்தை நிறைவேற்றும் பொறுப்பு முதல் கட்டத்தில் சில பெண்களுக்கும், மறு கட்டத்தில் தளபதி அங்கதனுக்கும் தரப்பட்டது.

அந்தத் திட்டத்தின்படி சில மலை நாட்டுப் பெண்கள் சில மூலிகைகளைப் பறித்து வந்தார்கள்.

உதயகிரி மலையில், ஒரு வகையான கனி உண்டு.

தோற்றத்தில் அது மாதுளங் கனி போல் இருக்கும். சுவையில் இனிக்கும்.

ஆனால் உண்ட சிறிது நேரத்துக்குள் சுய நினைவு அற்றுப் போகும்.

சில மூலிகைகளின் சாறைப் பிழிந்து, அந்தக் கனியையும் சாறாக்கிக் கலந்து, சிறிய மண் கலயத்தில் அதை எடுத்துக்கொண்டு நாகர்கோவிலுக்கு வந்தார்கள், அப்பெண்கள்.

அங்கே நாகங்களின் பாதுகாப்புக்கு மத்தியில் சோகத்தோடு அமர்ந்திருந்தாள் சலீமா.

கோவிலின் ஒவ்வொரு மூலையிலும், புகைச் சாடிகள் வைக்கப்பட்டிருந்தன.

வந்த பெண்கள் அந்தப் புகைச் சாடிகளில் நெருப்புக் கங்குகளைப் போட்டார்கள்.

தூபம் எழுவதுபோல் புகை எழத் தொடங்கியது.

அந்தப் பெண்கள் அனைவரும் தங்கள் நாசிகளில் எதையோ தடவிக் கொண்டார்கள்; ஆனால் சலீமாவுக்கு அதைத் தரவில்லை.

சுகமான அந்த வாசனையை அவள் நுகரத் தொடங்கினாள்.

சுகமான வாசனையில், சுகமான நினைவுகளும் வருமல்லவா?

மன்னவரைப் பற்றிய கனவுகளில் அவள் ஆழ்ந்தாள்.

ஆனால் சிறிது நேரத்தில், முகமெல்லாம் விறுவிறுப்பதுபோல் அவளுக்குத் தோன்றிற்று; தொண்டையும் நாவும் வறளத் தொடங்கின.

'தண்ணீர் கூடக் குடிப்பதில்லை' என்ற அவளது உண்ணாவிரதம் பலம் இழந்தது.

தொண்டை கல்லாக மாறிவிட்டது போல் அவளுக்குத் தோன்றிற்று.

''தண்ணீர்! தண்ணீர்!'' என்றாள்.

''தண்ணீர் என்ன, பழரசமே தருகிறோம்'' என்றார்கள் அவர்கள்.

கனிச்சாறு கலந்த மூலிகைச் சாற்றைக் கலயத்தோடு அவள் முன்னே நீட்டினார்கள்.

அவளுக்கு இருந்த வறட்சியில், மடமடவென்று அதைக் குடித்தாள் சலீமா.

மலைநாட்டுப் பெண்கள் சாடியில் புகைந்து கொண்டிருந்த தூபத்தை அணைத்தார்கள்.

சலீமாவுக்கு எல்லாம் புதியவையாகத் தோன்றின; காதல் நினைவு மறையத் தொடங்கிற்று.

நாகங்களோடு விளையாடத் தொடங்கினாள்.

மலையவேள் மகளிரைக் கட்டிப் பிடித்துப் பாடத் தொடங்கினாள்.

வாழ்க்கையை அலட்சியமாகப் பார்க்கும் பாரசீகப் பாடல் ஒன்று:

'எனக்கு இனி எதுவும் தேவையில்லை. நான் இந்தப் பூமிக்கு வந்ததன் நோக்கம் நிறைவேறிவிட்டது. பல வர்ணங்களால் ஆன வானவில் போல் என் வாழ்க்கையை அமைத்துக் கொண்டு விட்டேன்....

'அற்புதமான பாரசீகத் தோட்டங்களில் இனிமையான திராட்சையை உண்டு ஆனந்தமாக நான் பறந்து கொண்டிருப்பேன். எனக்கு யாரும் அடிமையில்லை. நானும் யாருக்கும் அடிமையில்லை!'

—அவள் பாடினாள், பாடினாள், பாடிக் கொண்டேயிருந்தாள்.

ஒன்றும் அறியாதவள் போல் தரங்கிணி மெதுவாக வந்தாள்.

அவளிடம் துள்ளிக் குதித்துச் சென்று, ''சகோதரி! நான் யார் தெரியுமா?'' என்று சிரிப்போடு கேட்டாள், சலீமா.

''தெரியுமே! சேரமான் காதலி'' என்றாள் தரங்கிணி.

''போடீ போ! நான் யாருக்கும் காதலியில்லை. நான் ஒரு 'புல் புல்' பறவை. பேரீச்சம் மரங்களின் மீது எப்போதும் அமர்ந்திருப்பேன். ஏன் இப்போதெல்லாம் இந்தப் பாரசீகத்தில் பேரீச்சம் மரங்களைக் காணோம்? அடி பெண்ணே! எனக்குச் சில மரங்களைக் கொண்டு வருவாயா?'' என்றாள் சலீமா.

''ஓ! கொண்டு வருவேன்'' என்றாள் தரங்கிணி.

''கொண்டு வருவதென்ன? கொஞ்ச தூரம் போனால் அங்கேயே அந்த மரங்கள் இருக்கின்றன'' என்றாள் அங்கிருந்த ஒரு பெண்.

''செல்வோமே'' என்றாள் சலீமா.

அதே போல், ''ஓ! செல்வோமே'' என்றாள் தரங்கிணி.

எல்லோருமே நடக்க ஆரம்பித்தார்கள்.

நடக்க, நடக்க, 'தனக்கு மிகவும் பிடித்தமான இடம் இந்த இடம்தான்' என்பது போல் சலீமா காட்சியளித்தாள்.

'அந்த மரம்', 'இந்தப் பறவை' என்று கூறிக் கொண்டே வந்தாள்.

ஏறக்குறையப் பித்துப் பிடித்துவிட்ட நிலை.





**மணல் கோட்டை**

சிறுமி: கோபுரம் எழுப்பலாம்,
கோட்டை மதில் கட்டலாம்.
கேணியும் தோண்டலாம்,
கும்மாளம் போடலாம்!

மங்கை: கடலோரக் கோட்டைகள்
கரைந்துமே போகலாம்,
இடமறியா மனமுமே
இளைத்துத் துயரடையலாம்.

சிறுமி: சரிந்த கோட்டை திரும்பவும்
சரியாக்கி எழுப்புவேன்!
எதிர்ப்பை என்றும் வாழ்விலே
சிரிப்பாலே சந்திப்பேன்!

மங்கை: விடா முயற்சி அதுவேதான்.
வெற்றிப் பாதை உனதேதான்!
விளையும் பயனைக் கருதாமல்
வாழும் வகையும் இனிதேதான்!

மேலட்டை வண்ணப்படம்: **உத்ரா**
சிறுமி: **ரஸிகா** — மங்கை **மாலினி**

---

ஓர் இடத்துக்கு அவர்கள் வந்தபோது, அங்கே சுமார் ஐம்பது பேர், பெரிய குழி ஒன்றை வெட்டிக்கொண்டிருந்தார்கள்.

அந்தக் குழியின் உட்புறத்தில் கற்களைப் பதித்துக் கொண்டிருந்தார்கள்.

அதைப் பார்த்துச் சலீமா துள்ளிக் குதித்தாள்.

''இப்படிப்பட்ட குழிகள் அரேபியாவில் மிக அதிகம். எனக்கு இந்தக் குழிகள் என்றால் ரொம்பவும் பிடிக்கும். இவற்றிலே தண்ணீரை நிரப்பிக் குதித்து விளையாடினால் மிகவும் உற்சாகமாக இருக்கும். ஆனால் ஒன்று — இதில் கொஞ்சம் மீன்களையும் விட வேண்டும்'' என்றாள் சலீமா.

''ஓ! அப்படியே! இனிமேல் நீங்கள் நிலையாகத் தங்கப் போவது இவ்விடமே'' என்றார் மலையவேள்.

''மகிழ்ச்சி, மகிழ்ச்சி'' என்று குதித்தாள் சலீமா. தரங்கிணிக்கு ஏனோ கண்ணீர் வந்து விட்டது.

''சிற்றப்பா! இவ்வொன்று மட்டும் வேண்டாம். ஓர் இளம் மகளை உயிருடன் புதைத்தல் அறமன்று. மலைக்குடியினர் தங்கள் தலைமுறைக்குச் செய்யும் மாசு ஆகும்'' என்றாள் தரங்கிணி.

''நீ பெண்! பெண்மை அவ்வண்ணமே புலம்பும். ஆயின் திருவஞ்சைக் களத்துக்கு இது என் கடமை'' என்றார் மலையவேள்.

குழியின் உள்ளே சிரித்துக்கொண்டே நின்றாள் சலீமா.

அவளைச் சுற்றிலும் நீண்ட சதுர வடிவமான செங்கற்கள் வைக்கப் பட்டன.

கழுத்து வரையிலும் அந்தக் கற்கள் வைக்கப்பட்டதும், தரங்கிணி மூர்ச்சையடைந்தாள்.

தரங்கிணி மட்டுமல்ல; இளகிய மனம் படைத்த மற்றும் சில பெண்களும் மூர்ச்சையடைந்தார்கள்.

மேலே கோபுரம் போன்ற ஒன்றைக் கவிழ்த்து மூடி விட்டால், அத்தோடு சலீமாவின் கதை முடிந்து விடும்.

ஏற்கெனவே செய்து வைக்கப்பட்டிருந்த அத்தகைய கோபுரத்தைப் பத்துப்பேர் தூக்கினார்கள்.

அங்கதன் அவர்களுக்கு ஆணையிட்டுக் கொண்டிருந்தான்.

சலீமா வைக்கப் பட்டிருந்த அந்தக் கற்கட்டை அந்தக் கோபுரந் தாங்கிகள் நெருங்கத் தொடங்கியபோது, பத்துப் பேர் கைகளிலும் சரமாரியாகக் கணைகள் பாய்ந்தன.

கணை பாய்ந்த வேகத்தில் அவர்கள் அதைக் கீழே போட்டதும், கோபுரம் உடைந்து தூளாயிற்று.

மலையவேள் திகைப்போடு வில்லை எடுத்தார்.

அங்கதன் வாளை எடுத்தான்.

எதிரே சுமார் ஐம்பது மலைஜாதியினரே நின்று கொண்டிருந்தார்கள், வில்லும் அம்புமாக.

அங்கதன் வாளை உருவி அவர்களை நெருங்கினான்.

அவர்கள் தங்கள் மலைஜாதி வேஷத்தைக் கலைத்தார்கள்.

அவர்கள் வேறு யாருமில்லை.

சேரமான் பெருமாளும், அவரது ஐம்பது வீரர்களுமே.

மூர்ச்சை தெளிந்த தரங்கிணி நடுங்கினாள்.

மலையவேள் மண்டியிட்டார்.

அங்கதன் அடிபணிந்தான்.

அமைதியாகத் தரங்கிணியிடம் சேரமான் சொன்னார்:

''தரங்கிணி! தடயம் கண்டுபிடிக்க உதவியதே நீதான். அரண்மனையில் நீ இல்லையென்றதும், அடுத்த முடிவை நான் எடுப்பதற்கு வசதியாக இருந்தது.'' —இப்படிச் சொன்ன அவர் தம் வீரர்களுக்கு ஆணையிட்டார்.

வீரர்கள் சலீமாவைச் சுற்றியிருந்த கற்களை உடைக்க ஆரம்பித்தார்கள்.

சலீமா கோபத்தோடு, சேரமானைப் பார்த்து, ''யாரடா, நீ?'' என்றாள். சேரமான் இகைத்தார்.

(தொடரும்)

## கூட்டணியின் விளைவால் குழப்பநிலை!







☐ கல்கியில் வெளியான திரு க. சந்தானத்தின் தலையங்கம் மிகவும் பயனுள்ளதாக, தெளிவாக இருக்கிறது. ஆனால் இந்த மக்கள் சபைத் தேர்தலில் வாக்காளர் பலர் குழப்ப நிலையிலேயே இருக்கிறார்கள். காரணம் கட்சிகளின் கூட்டுதான்.

உதாரணமாக எங்கள் தொகுதியில், ஒருவர் காங்கிரசுக்கு ஓட்டுப் போட விரும்பினால் அவர் அ. அ. தி. மு. க. வுக்குத்தான் ஓட்டுப் போட வேண்டும். அதுபோல் ஜனதா கட்சிக்கு ஓட்டுப் போட விரும்பினால் அவர் தி. மு. க. வுக்கு ஓட்டுப் போட வேண்டிய நிர்ப்பந்த நிலை.

காமராஜ் சொன்ன "ஒரே குட்டையில் ஊறிய இரண்டு மட்டைகளில்," ஏதாவது ஒரு மட்டைக்குத்தான் நாங்கள் ஓட்டுப் போட்டேயாக வேண்டிய ஒரு நிர்ப்பந்த நிலை. இந்த இரண்டு கட்சிகளையுமே பிடிக்காதவர்களுக்குக் குழப்ப நிலை.

திருநெல்வேலி
24-2-77 — எஸ். கண்ணன்

"அவன் பார்த்துப்பான்" நாடகத்தைச் சென்னையில் பார்த்தவன் நான். நாடகத்தைப் பார்க்கும்போது ஏற்பட்ட உணர்வுகளே அதைக் கல்கியில் படிக்கும்போதும் ஏற்பட்டது. இவை போன்ற நல்ல நாடகங்களைத் தொடர்ந்து பிரசுரியுங்கள். கல்கியில் இடம் பெற்ற புகைப்படங்களும் படு டாப்!

25-2-77
கோம்பூர் — எஸ். சங்கரசுப்பிரமணியன்

☐ 'அவன் பார்த்துப்பான்' நாடகம் நல்ல இயல்பான நடையழகுடன் மிளிர்ந்தது. 'பிரசாத்' போன்ற சமூகத் துரோகிகள் **அவன்** பார்வையிலிருந்து தப்ப முடியாது என்ற உயர்ந்த தத்துவத்தின் மூலம் கதையின் முடிவை உயர்த்தி விட்டார் ஆசிரியர்.

இடையில் சிறிது தொய்வு ஏற்பட்டது மாதிரி தோன்றினாலும் முடிவை அறிந்து கொள்ளும் உத்வேகத்தோடு அடுத்து வரும் இதழ்களைப் படிக்கத் தூண்டியது. சிவராமன் பாத்திரமும், சர்மாவின் பாத்திரமும் ஏ. ஒன்!

ஒசூர்
24-2-77 — இருதயகமலவாசன்

☐ "புள்ளியில் பிறந்த வட்டம்" என்ற மர்மச் சிறுகதையின் ஒரு மர்மத்தை விடுவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். பம்பாயிலிருந்து ரயிலில் சென்னை வரும் போது முதலில் குண்டக்கல் வரும் என்றும் அதன் பின் தான் கடப்பா வரும் என்றும் அறியவும்.

திண்டிவனம்
24-2-77 — ராஜா ராவ்

☐ எங்களுடைய தொழிற்சாலைக்குச் சென்ற வருஷ அடிப்படையில் 380 யூனிட் மாதக் கோட்டா கொடுத்திருக்கிறார்கள். இவ்வருஷம் தொழில் நடைபெறாததால் தொழிற்சாலையைப் பூட்டி வைத்திருக்கிறோம். மின்சாரத்தை அறவே உபயோகிக்கவில்லை. ஆனாலும் விதியே என்று மாதா மாதம் 380 யூனிட்டுக்கும் முழுமையாக மின் கட்டணம் செலுத்திக் கொண்டு வருகிறோம். மின்வாரியம் அத்தோடு திருப்தி அடையவில்லை. கட்டணத் தொகை மீது 50 சதவீதம் சர்சார்ஜும் கூட்டுகிறது. ஆசையை அத்தோடும் நிறுத்திக் கொள்ளவில்லை. யூனிட் ஒன்றுக்கு ஒரு பைசா வீதம் 380 பைசா தனி சர்சார்ஜும் வசூலிக்கிறது. இது முறையா என்றால் வாரியத்தின் நஷ்டக் கணக்கைக் காட்டுகிறது.

வாரியத்தின் நஷ்டத்துக்காக நாங்களும் கஷ்ட நஷ்டத்துக்குள்ளாக வேண்டுமா?

ஸ்ரீவில்லிபுத்தூர்
23-2-77 — டி. நாராயணசாமி

☐ 6-3-77 இதழ் பிரமாதம். மணியம் செல்வத்தின் அற்புதமான அட்டைப் படத்தில் துவங்கி சிலம்புச் செல்வம் வரை அத்தனையும் சத்துள்ள விஷயங்கள். என்போன்ற இளைஞர்களுக்கு வரப்பிரசாதமாய் மூதறிஞர் வாழ்க்கை வரலாறு துவக்கத்திலேயே களை கட்டிவிட்டது. பொன்னியின் புதல்வரைத் தரிசித்தபோது உள்ளம் உழப்பட்டது. இப்பொழுது பயிர் தூவிட மற்றொரு வாழ்க்கை வரலாறு பொங்கி வருகிறது! திரு க. சந்தானத்தின் உன்னதமான தலையங்கம், தமிழாக்கம் புரிவதில் நிகரற்ற வீழிநாதனின் 'விமல் மித்ர'வின் சாட்சி நம்பர் 3-ன் புதுமையான துவக்கம், பி. வி. ஆரின் மதுரமான மதுரநாயகி இத்தனையும் கல்கியில் படித்த போது மனம் நிறைந்த ஆனந்தம் பெற்றேன்.

3-3-77
சேலம்-1 — பா. சௌந்தரராஜன்

# வரலாறு காணாத வறட்சியை வென்ற தமிழ்நாடு



# பாதிக்கப்பட்ட ஒரு கோடி மக்களின் தீரமிக்க சாதனை

'வானம் பொழிகிறது, பூமி விளைகிறது' என்பார்கள். ஆனால் அதற்குத்தான் எத்தனை இடையூறுகள்! வறட்சி, வெள்ளம் இயற்கை காட்டும் சீற்றங்கள்! இவற்றை எதிர்த்து வெற்றி காணுவது ஒரு மாபெரும் போராட்டம். திடசித்தம், செயலில் உறுதி, கடின உழைப்பு ஆகியவற்றால் இப் போராட்டத்தை வெற்றி காண வேண்டும்.

தமிழ்நாட்டில் கடந்த ஆண்டு வரலாறு காணாத வறட்சியின் கொடுமையினை ஒரு கோடி மக்கள் மன உறுதியுடன் சமாளித்தனர். இது, மக்கள் கண்ட மாபெரும் சாதனை. இரண்டு மாவட்டங்கள் தவிர பதின்மூன்று மாவட்டங்களில் கடும் வறட்சி ஏற்பட்டது. பனைமரங்களும் பட்டுக் கருகின.

வறட்சியால் பாதிக்கப்பட்ட 4725 கிராமங்களில் வாழும் ஒரு கோடி மக்களின் துயர் துடைக்கப்பட்டது: மும்முனைத்திட்ட அடிப்படையில்—குறுகிய காலத் திட்டங்கள்—தீவிர செயல் முறைகள்—உடனடி நிவாரணம் ஆகியவை மூலம் ரூ. 27 கோடி செலவில் மக்களின் துன்பத்தை துடைத்தது தமிழ்நாடு அரசு. குடிநீர் வசதி, வருவாய் தரும் வேலை வாய்ப்புக்கள், பாதிக்கப்பட்ட மக்களுக்கு புதுவாழ்வு ஆகியவற்றால் இச்சோதனை சமாளிக்கப் பட்டது.

12 கோடி ரூபாய் செலவில் 10,000 சிற்றூர்கள் குடிநீர் வசதி பெற்றன.

15 கோடி ரூபாய் செலவில் வேலை வாய்ப்புத்திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன.

பனைச் செல்வத்தை நம்பி வாழ்வோருக்கு பல்வேறு புதுவாழ்வுத் திட்டங்கள் செயல் படுத்தப்பட்டன.

## குடிநீர் வழங்கு பணித்திட்டங்கள்

- எட்டே மாதங்களில் 6711 துளைக் கிணறுகள் தோண்டப்பட்டன. இந்த எண்ணிக்கை முந்திய ஐந்து ஆண்டுகளில் இறக்கப்பட்ட துளைக்கிணறுகள் எண்ணிக்கைக்குச் சமமாகும். இது ஓர் அரிய சாதனையல்லவா ?
- 7671 கிணறுகள் ஆழப்படுத்தப்பட்டன.
- 518 குடிநீர் குளங்கள் (ஊருணிகள்) ஆழப் படுத்தப்பட்டன.
- நிலத்தடி நீர் உவர்நீராக அமைந்துவிட்ட ஏறத்தாழ 300 கிராமங்களுக்குக் குடிநீர் வசதி அளிப்பதற்காக 3 கோடி ரூபாய் செலவில் குழாய் மூலம் குடிநீர் வழங்கு திட்டங்கள்.
- 31 நகராட்சிகளில் குடிநீர் வழங்கு பணிக்கென 71 லட்சம் ரூபாய் நிதி உதவி.

## வேலை வாய்ப்புத் திட்டங்கள்

- வட ஆர்க்காடு, தென் ஆர்க்காடு, கோயம்புத்தூர், மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களில் பெரியதும், நடுத்தரமானதுமான ஆறு பாசன பணிகளுக்கு 3 கோடி ரூபாய்.
- 2992 சிறுபாசனப் பணிகளுக்கு 8.12 கோடி ரூபாய்.
- 1442 சாலைப் பணிகளுக்கு 2.37 கோடி ரூபாய்.
- 31606 ஹெக்டேர் பரப்புள்ள நிலங்களில் எல்லை வரையறைக் கரைகள் அமைப்பதற்கும் 244 கசிவு நீர் குட்டைகள் அமைப்பதற்கும் 1.35 கோடி ரூபாய்.
- 6355 ஹெக்டேர் பரப்பில் காடுகள் வளர்ப்பதற்காக 41 லட்சம் ரூபாய்.

## சிறப்புத் திட்டங்கள்

- இராமநாதபுரம் மாவட்டத்தில் இராஜபாளையத்திலும், திருநெல்வேலி மாவட்டத்தில் சிவகிரியிலும் மணல் காற்று வீசி மேடிட்ட நிலங்களை 35 லட்சம் ரூபாய் செலவில் மறுபடியும் திருத்திப் பண்படுத்துதல்.
- வறட்சி காரணமாக திருநெல்வேலி மாவட்டத்தில் பனைமரங்கள் பட்டுப்போனதால் பாதிக்கப்பட்ட பனையேறும் தொழிலாளர்களுக்குச் செம்மறி ஆடு வளர்த்தல், பனையோலைப் பாய் முடைதல், பனை நார் எடுத்தல் போன்ற மற்ற தொழில்களில் அமர்த்திப் புதுவாழ்வு அளிப்பதற்காகவும் புதிதாக 4 லட்சம் பனை மரக் கன்றுகளை நடுவதற்காகவும் 33 லட்சம் ரூபாய் ஒதுக்கீடு.

maa DIPR 7072/77-2/115

# சிலம்புச் செல்வம்



**ம. பொ. சி**

நாட்டை ஐந்து வகையாகப் பிரித்தனர் சான்றோர். அவை மருதம், நெய்தல், பாலை, முல்லை, குறிஞ்சி ஆகியனவாம். இந்த ஐவகை நிலத்துக்கும் ஐவேறு தெய்வங்களையும் படைத்தனர். இந்த ஐவகை நில வேறு பாடுகளையும், அங்கெல்லாம் நிகழும் வேறு பட்ட தெய்வங்களின் வழிபாடுகளையும் சிலம் பிலே காட்டுகின்றார் இளங்கோ.

புகார்க் காண்டத்தில் இந்திர விழாவூ ரெடுத்த காதையிலே, மருத நிலமான புகார் நகரத்து மக்கள் தங்கள் நிலத்தெய்வமான இந் திரனுக்கு வழிபாடு நிகழ்ந்துவதைக் காட்டினார்.

மதுரைக் காண்டத்தின் தொடக்கத்திலே பாலை நிலத்து மக்களான எயினர்கள் தங்கள் நிலத் தெய்வமும் குலதெய்வமுமான கொற் றவையை வழிபடுவதனை 'வேட்டுவ வரி' யிலே காட்டினார். ''கானல் வரி''யில் ''மாக் கடல் தெய்வம்! நின் மலரடி வணங்குதும்'' என்று மாதரியைப் பாட வைத்து, நெய்தல் நிலத்துக்குரிய வருண வழிபாட்டையும் கட் டிக் காட்டினார்.

இப்போது, ஆய்ச்சியர் குரவையிலே, முல்லை நிலத்தில் வாழும் ஆயர் குலப் பெண் களைக் கொண்டு திருமால் வழிபாட்டினைக் காட்டுகின்றார்.

மேலே வஞ்சிக் காண்டத்தின் தொடக்கத் தில் குன்றக் குரவையிலே குறவர்கள் தங்கள் குல தெய்வமான முருகனை வழிபடுவதனைக் காட்டுவார்.

முல்லை நில மக்களின் வழிபாடாக ஆய்ச்சி யர் குரவை தேவைப்பட்டிருப்பினும் அதனைக் கண்ணகியின் கதையோடு பிணைக்க வேண் டியது அவசியமாகிறது அல்லவா? அதற் காகத்தான் மாதரியின் இல்லத்தில் தூர்ச் சகுனங்களைக் கற்பித்து, அச்சகுனங்களைக் கண்டு அஞ்சிய மாதரி, ஆயர் குலத்துக்கு– தன்னிடம் அடைக்கலம் புகுந்த கண்ணகிக்கு –தீங்கு ஏதும் வாராதவாறு காக்குமாறு திருமால் வழிபாடு நடத்துவதாக இளங்கோ வடிகள் கூறுகின்றார்.



குரவைக் கூத்தில் கலந்து கொள்ளும் கன் னிப் பெண்கள் எழுவரைக் கூறும் மாதரி,

''தொழுவிடை ஏறு குறித்து வளர்த்தார்
எழுவர் இளங் கோதையார்''

என்று கூறுகின்றாள். இதன் பொருள், ''தம்மோடு சேர்ந்து வளரும் ஏழு ஏறுகளைக் கொண்ட கன்னியர் எழுவர்'' என்பதாகும். பண்டைய நாளில் பெண் பிறந்தால், அவளை வளர்க்கும் பெற்றோர், அவளோடு சேர்ந்து 'ஏறு' எனப்படும் காளை ஒன்றையும் வளர்ப் பார்கள். அந்தப் பெண்ணை மணம் செய்து கொள்ள விரும்பும் ஆடவன், அவளோடு சேர்ந்து வளரும் காளை மாட்டை அடக்கி, தன் ஆண்மையை வெளிப்படுத்திக் காட்ட வேண்டும். ஏற்றினுக்குரிய கன்னி, ஒரு பரண் அமைத்து, அதன் மீது தோழியரோடு அமர்ந்திருப்பாள். திறந்த வெளித் திடலில் மணம் விரும்பும் இளைஞன் காளையை அடக்கும் நிகழ்ச்சி நடைபெறும்.

இயற்கையாகவே கொல்லும் தன்மை வாய்ந்த கொம்புகளைப் பெற்றிருக்கும் அந்தக் கொல்லேறு, நிகழ்ச்சி நடக்கும் நாளிலே அதன் கொம்புகள் மேலும் கூர்மையாகச் சீவி விடப்படும். அந்தக் காளையுடன் போராடி, அதனை அடக்கி, அதன் முதுகின் மீது மணம் விரும்பும் தமிழ் மகன் அமர்ந்து விடுவானானால் அந்த நிகழ்ச்சி கண்டு, பரண் மீது அமர்ந் திருக்கும் கன்னியானவள் ஓடி வந்து காளையை அடக்கிய இளைஞனுக்கு மலர் மாலை சூட்டு வாள். இது காரணமாகத்தான் இளந் தமிழனைக் 'காளை' என்று சிறப்பித்துச் சொல் லும் வழக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும். காளையை அடக்கி வெற்றி பெறத் தவறி, அந்தச் சோதனையிலே மணத்தை விரும்பும் மகன் தோற்றுவிடுவானானால், 'இந்தப் பிறவி யில் மட்டுமின்றி, மறு பிறவியிலும் என் மகள் அவனை மணக்க மாட்டாள்' என்கிறாள் கலித்தொகையில் வரும் ஆய மகள்.

சிலப்பதிகாரக் காலத்திலே முல்லை நிலத் தில் வாழ்ந்த ஆயர் குலத்தவர் கடைப் பிடித்த இந்தப் பழக்கத்தை ஆய்ச்சியர் குரவையில் வரும் ஏழு கன்னிப் பெண்களின் மேல் ஏற்றிக் கூறுகின்றார் இளங்கோ. வளரும் காளைகளின் பெயர்களைச் சொல் லியே, கன்னியரை அறிமுகப்படுத்துகிறார்.

(தொடரும்)

**(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து)**

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.



சாதாரணப் பவுடர்களால் துலக்கும்போது
பிசுக்குகள் பின்தங்கிவிடக் கூடும்.



# மாசில்லாத பளபளப்பை வீசிட வைப்பது விம்.

## இதன் துலக்கும் சக்தி 50% அதிகம்.

துலக்குவதற்கான வேறெந்தப்
பவுடரையும் விட மிக அதிக அளவு
டிட்டர்ஜெண்ட் அடங்கியது விம்.
ஆகவே தான், கூடுதலான
துலக்கும் சக்தியோடு,
பிசுக்குகளையும் கறைகளையும்
அறப கொடியில் அகற்றுகிறது.
பொடிக் கசடுகள் எதும்
பின்தங்கும்படி விடுவதில்லை.
மேலும், மிக மிக நைஸான
பவுடராக இருப்பதால், கீறலே
இல்லாத மழமழப்புக்கு உறுதி
தருகிறது. தோட்டதை யெல்லாம்
தூய்மை பளிச்சிடத் துலக்குவது விம்.







இந்தப் பேக்
வாங்கினால் உமக்கு
25% க்கும்
அதிகமாக
மிச்சமாகும்.

இதுவ்தான் விமின் இத் தரமான தயாரிப்பு 600 கிராம் மற்றும் 2.5 கிலோ பேக்கிங்குகளில் கிடைக்கிறது. உதிரியாக ஒருபோதும் கிடைப்பதில்லை.

---

லிண்டாஸ்-V.55-203 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேயா காசு